339

உ

"Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."

"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the end."

ஸத்யம்வத,—**Speak the Truth.**

**"Hitch Your Wagon to a Star."** **"To Thine Own Self be True."**




அன்பேசிவம் : அறிவேசக்தி : ஓம் தத்சத்.] உ [God is Love: Knowledge is Power. *Om.*

ஸத்யமேவ ஜெயம்—**Satyameva Jayati.**


புத்தகம் **16.**] **1908-** ஞு டிசம்பர் மீ [சஞ்சிகை **12.**


With this number we complete the 16th Volume of the *Vivekachintamani.* Subscribers who are still in arrears will please remit their subscriptions without delay. Our patrons and supporters who have paid their subscriptions for Vol. XVI are requested to remit their subscription for Vol. XVII in advance and help us go on with our work, without interruption.

## LYING FALLOW.

## "தரிசுபோடல்."

"In the spiritual as in Nature, there is a time to sow, a time to reap, and a time to lie fallow. Therefore, learn the lessons well, as they come to thee, otherwise it may be ages before the same lessons may present themselves again, and thou mayst suffer greatly for the lack of the experience that they would have taught thee."

"உடம்பினைப்பெற்ற பயனாவதெல்லாம்
உடம்பினில் உத்தமனைக்காண்."—ஔவைகுறள்.

காலமறிந்து பயிர்செய்ய வேண்டுமென்பது பழமொழி. விதைக்குங்காலமறிந்து விதை விதைக்கவேண்டும். அப்படியே மகசூல் முதிருங்காலமறிந்து பலனறுக்கவேண்டும். விதைக்கும் காலத்தில் விதைத்து அறுவடைக்காலத்தில் அறுத்தால், பின்னர் தரிசுபோடவேண்டிய காலம் வரும். அக்காலத்தில் தரிசுபோட்டு வைக்கவேண்டியது அவசியமாம். இல்லாவிட்டால் நிலம் நன்றாக விளையாது. புறத்தில் பயிர்செய்வதெப்படியோ அப்படியே அகப்பயிர் செய்தலாம் அறிவுவிர்த்தியிலும். அகத்திற்செய்யும் பயிர் மனப்பயற்சியாம். மனதை அதிலுள்ள வாசனைகள் கிளம்ப உழுது பண்படுத்தி வினைப்பயிர் செய்யவேண்டிய காலமுமுண்டு. செய்வினை முதிருங்கால், வினைப்பயனை யீறுக்குங் காலமுமுண்டு. வினையியற்றி வினைப்பயனறுத்தபின்னர் மனது விசி

ரர்ந்தி யடையும்பொருட்டு அது தொழிலற்று இளைப்பாறவேண்டி தரிசுபோட்டு வைக்கவேண்டிய காலமுமுண்டு. இது ஒவ்வொன்றுக்கும் ஏற்றகால முண்டாதலால், காலமறிந்து ஞானப்பயிர் செய்யவேண்டும். ஞான பூமியாகவுள்ளது "க்ஷேத்திரம்" என்று சொல்லப்படுவது. ஞானப்பயிர்செய்வோன் "க்ஷேத்திரஜ்ஞன்"—க்ஷேத்திரத்தின் ஸ்வபாவமறிந்து அதை வளர்ப்போன். "க்ஷேத்திரம்" என்று சொன்னது ஸ்தூல, சூக்ஷ்ம, காரணமென மூவகைப்பட்டதாம். ஸ்தூலமாயுள்ளது தேஹம்; சூக்ஷ்மமாயுள்ளது மனது; இவ்விரண்டிற்கும் காரணமாயுள்ளது "அவித்தை" என்று சொல்லும் "ஆதிவாசனை." தேஹமின்றிப் பிரபஞ்சவுணர்ச்சியில்லை. மனமின்றி சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமாம் தொழில் இல்லை. அதாவது, விதைத்து முளைத்தலும், வளர்ந்து முதிர்தலும், அறுவடையாகி யனுபவித்தலுமாகிய வியவஹாரங்கள் மூன்றுமில்லை. ஆகையால் மனமின்றிச் செய்வினையில்லை. "அவித்தை" யென்று சொல்லும் "ஆதிவாசனை" யின்றி வினைப்பயன் துய்த்தலாம் அறுவடை யனுபவமில்லை. அறிவு அல்லது ஆத்மா, என்றும் சம்பூர்ணமானது; அதற்குக் குறைவு நிறையில்லை. சூரியனைப்போல் ஸ்வயம்பிரகாசமாக விளங்குவது. சூரியனைக் கிரகணம் பிடிப்பதுபோல், குறை நிறையற்று ஸ்வயம்பிரகாசமாக விளங்கும் அறிவு அதிலிருந்துண்டாகும் இச்சாமாத்திரத்தால் மலினமுற்று விளங்குகிறது. இச்சையொன்று ஜனிக்கவும் அதிலிருந்து மேன்மேலும் ஸம்ஸார விருத்தியுண்டாகிறது. நிர்மலமான, அறிவு மழுங்கவும் இருள் என்னும் அவ்யக்த பிராப்தமான அவ்யாகிருதம் உண்டாகிறது. சுஷுப்தியில் (நித்திரைகாலத்தில்) ஜீவன் எந்த நிலையில் இருக்கிறானோ அதுஜீவனுக்கு இருள் என்னும் அவித்தை யல்லது அறியாமை. இந்தஅவித்தை பிண்டத்திலுள்ள ஜீவனுக்கு எப்படியோ, அப்படிப்போல், அவ்யாகிருதம் என்பது அண்டத்திலுள்ள பிராஜ்ஞன் என்னும் அறிவுமயனான ஈசுவரனுக்கு உபாதியாகவிருக்கிறது. நள்ளிருளில் விழித்திருக்கும் புருஷன் இருளையன்றி வேறு ஒன்றையும் காணான்போல, சுஷுப்தி அவ்ஸ்தையிலிருக்கும் ஆத்மா, பிண்டத்திலாகட்டும், அண்டத்திலாகட்டும், இருளையன்றி வேறொன்றையும் காணாதவனாய், இருளோடு தாதாத்மிய சம்பந்தப்பட்டதால், இருள்மயனேயாகி 'அறியாமை' அல்லது 'அவித்தை' யென்றும் 'அவ்யாகிருதம்,' என்றும் பேர்பெற்று விளங்குகிறான். இருளை இருளென்று அறியலாமாகையால் இருள் மயமாயுள்ள உபாதி அறிவுக்குஅந்நியமாயுள்ளதே. இந்த இருள்மயமாயுள்ள சரீரம்தான் காரண சரீரமென்று சொல்லப்படுகிறது. இருளில் எல்லா வஸ்துக்களும் தோற்றுதலன்றி எப்படி அபேதமாக மறைந்து கறைந்து கிடக்கின்றனவோ, அப்படியே அறியாமையென்னும் இருளில் வஸ்துக்கள் தோற்றாமல் எல்லாம் அந்தஅறியாமையென்னும் இருளில் கறைந்து மறைந்து அதன் மயமாக விளங்குகின்றன. இதுதான் சுஷுப்தியனுபவம். இந்த நிலையில் எல்லாம் ஒருதன்மையாக இருளில் மறைந்து பிரளயத்தில் மூழ்கிய உலகம் வேற்றுமையற்று எங்கும் ஒரே பிரளயமாகத் தோற்றுவதுபோல இருப்பதால், செய்வினை சேஷ்டைக்கு இடமில்லை. இதுதான் தரிசுகிடத்தலாம். இந்த நிலைமையில் விதைத்தலுமில்லை, விளைத்தலுமில்லை; அறுவடை யனுபவமாகிய பயன்துய்த்தலுமில்லை.

"முற்பகல்விதைக்கிற் பிற்பகல் விளையும்" என்பது ஔவையாரது அருள்வாக்கு. முற்பகல் விதைத்தது பிற்பகல்விளையுமானால், அதன் பயனை யறுத்தனுபவிப்பார் நள்ளிரவதனில் நயந்திளைப்பாறுவார். இது "தரிசுபோடலுக்கு" ஒப்பாகும். ஒருநாள் என்று சொல்லும் கால அளவில் எப்படியோ அப்ப

டியே வாரம், மாசம், வருஷம், ஆயுள் என்று சொல்லும் ஒவ்வொரு காலவரையறைக்கும் உண்டு. ஆயுள்காலத்தை யெடுத்துக் கொண்டால் பிறப்பு விதைத்தல், மூப்பிறப்பு அறுவடை யனுபவம்; இறந்தபின் மறு பிறப்புவரையிலுள்ள காலம் தரிசுபோடலுக்கு ஒப்பாகும். இப்படியே பிரம்மாவுடைய ஆயுளுக்கும் அமையும். அதை கல்பகாலம் என்று சொல்லுகிறது. "காலம்" என்பது உண்மையாகவே பார்த்தால்அளவுகடந்தது: நித்தியமாயுள்ளது. அதற்கு ஸ்வபாவமாக ஒரு வரையறையில்லை. ஆனால் சங்கல்பவிகல்பத்தால் அதற்கு "அளவு" ஏற்படுகிறது. இந்த அளவு சங்கல்ப விகற்பமாத்திரத்தினுலுண்டாவதால், அந்த சங்கல்பவிகற்பமுள்ள அளவே இந்தக் காலவரையறையும் உள்ளதாய்த் தோன்றி அது அழியவும், இதுவும் அழிந்து "காலம்" அதற்கு ஸ்வபாவமான நித்திய தத்துவமாக விளங்கும். நிலத்தைத் தரிசுபோடலுக்கொப்பான காரணசரீரம் இளைப்பாறுதலுக் கிடமாயிருத்தல்போல, சூக்ஷ்ம சரீரமாம் மனது பயிர்த்தொழில் செய்வதற்கு ஒப்பாய் விளங்கும். எப்படியென்றால், "சங்கற்பவிகற்பம்" (அதாவது "நினைத்தல்-மறத்தல்") என்று மேலே சொல்லியது எதுவோ அதுவே மனசு என்று சொல்வதின் ஸ்வரூபமாக விருக்கிறது. சங்கல்ப விகற்பத்தொடர்பே மனசு ரூபமாயிருக்கிறது. சங்கல்பம் விதைத்தல்; விகற்பம் அறுத்தல்; 'சங்கல்ப விகற்பம்' விதைத்தலறுத்தலுக்கொப்பானல், மறு சங்கற்பம் உதிக்குமுன் தரிசு போடலுக்குச் சமானமான இளைப்பாறுதல் காலம் ஒன்று இருக்கவேண்டும். உண்மையாகவே பார்க்கில் ஒரு சங்கல்பத்திற்கும் மறு சங்கல்பத்திற்கும் இடையில் "தரிசு போடலுக்கு" ஒப்பான இடைவெளியொன்று இருக்கிறது. அது அவித்யா புருஷனுக்கு சூனியமாக விளங்கும். வித்வத் சிரேஷ்டனை பிரம்மவித்துக்கு சித்வெளியாக விளங்கும். மனம் என்பதுவிதைப்பதும் அறுப்பதுமே தொழிலாயிருக்கிறது. நிலத்தில் எள்ளுவிதைத்தால் கொள்ளுவிளைகிறதில்லை: எள்ளேதான் விளையும். அதுபோலவே, நன்மைவிதைத்தால் நன்மையேதான் விளையுமன்றி, ஒருக்காலும் தீமைவிளையாது. தீமைவிதைத்தாலும் தீமையேதான் விளையும். ஆகையால் விதைத்தவன் விதைத்ததையே ஒன்று பலவாக அறுப்பனன்றி வேறொன்றை அறுத்தனுபவிக்கமாட்டான். இந்த உண்மையை ஔவையார் "நன்மை விதைத்தால் நன்மைவிளையும், தீமைவிதைத்தால் தீமைவிளையும்" என்னும் மூதுரையில் வற்புறுத்திக் கூறியிருக்கிறார். சூக்ஷ்ம தேகமான மனம் பயிர்விளைநிலமும், காரணதேகமான 'அவித்தை' அல்லது அறியாமையென்பது தரிசுகிடக்கும் நிலமாகவுமானல், உழுது பண்படுத்தி விதைவிதைக்கத் தயாரானநிலம் எது? என்கிற கேள்வி பிறக்குமே! அதுதான் ஸ்தூல தேஹம். இந்த க்ஷேத்ரமாகிய நிலத்தில் கோட்டைகட்டி விதை விதைக்கப் பக்குவமான "பிராரப்தம்"என்கிற வினைக்கோட்டையை விதைத்து, வினைப்பயிர்செய்து, சஞ்சிதம், ஆகாமியம் என்கிற மஹாசூல்விளைய அறுவடையறுத்து "அனுபவம்" என்கிற ஜீவனம் செய்கிறோம். விதை விதைத்தவன் அறுப்பறுக்கவேண்டும். இந்த நித்திய சாகுபடியில் விதைத்தவன் தான் விதைத்ததை யறுக்காமல் தப்பித்துக்கொள்ளமுடியாது. விதைத்தது முளைத்தேதீரும். முளைத்தது வளர்ந்தே முடியும். வளர்ந்து முதிர்ந்ததை யறுத்தேயாகவேண்டும். அறுத்ததையும் அனுபவித்தேதான் தீரவேண்டும். ஆகையால் இந்த வினைப்பயிர் செய்வோர் என்ன வித்து விதைத்தால் நல்லகதி யடையலாம்? தனுகரணபுவனபோகாதிகளைக் கொண்டுசெய்யப்படும் இந்த ஞானப் பயிர் செய்வானொருவன்,—

"வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்."

என்று இந்தப் பயிர்த்தொழில் செய்து கிருதார்த்தரான திருவள்ளுவநாயனர் கருணை பூரித்துச் சொல்லலாயினர். அப்படியெனின்,—

"ஒருவன் அறத்தையே பயிர் செய்யவேண்டும்." அறப்பயிர் செய்வோன் "வீழ்நாள் படாஅமை" அதாவது அறப்பயிர் செய்யாமற் கழியும்நாள் உண்டாகாதபடி அறத்தைப் பயிர் செய்யவேண்டும். அறம்என்றால் என்ன, வேறொன்றுமில்லை: "நன்றாற்றல்"—நன்மை செயலேஅறமாம். ஔவையார் "ஈதல்அறம்" என்றார். அப்படியெனின், பிறருடைய நன்மைக்காகத் தன்னைக் கொடுத்துழைத்தலே "அறம்"—தர்மமாம் என்பது பொருள். இப்படியொருவன் ஒருநாளும் தவறாது "அறப்பயிர்"செய்து தர்மமியற்றி வந்தானாகில், அஃது வளர்ந்து முதிர்ந்து கடைசியில் அறுவடை யனுபவகாலத்தில், அவன் "வாழ்நாள் வழி யடைக்குங்கல்" ஆகும். அதாவது, அவன் சரீரத்தோடு கூடி வாழுநாளாகிய "பிறவிநோய்" என்னும் பிணிவரும் "வழி"யை வராமல் அடைக்கும் "கல்" என்று சொல்லும்படி அவனது "அறப்பயிர்" அப்படி மலையாகவளர்ந்து மேருவாக் குவிந்து விளங்கி "மோக்ஷம்" என்றுசொல்லும் ஸ்வதந்திரமாகிய பலனைக்கொடுக்கும். சுருதியும் "ஸத்தியம்வத, தர்மம்சர" என்று கூறியுள்ள தல்லவோ! ஆகையால் அறப்பயிர் செய்வோர் 'தரிசுபோடும்' காலம் கிட்டிய போது "நிர்விகற்பசமாதி" யென்று சொல்லும் தூங்காமற் றூங்கும் சுகத்தை யனுபவிப்பர் என்பது சொல்லாமே அமையும்.

"அஞ்ஞானம், அகங்காரம், ஆவா, விருப்பு, வெறுப்பு என்கிற ஐவகைக் குற்றங்களால் வருகிற நல்வினை, தீவினையென்கிற இருவகை வினைகளும் உள்ளவரைக்கும் உயிர் உடம்போடு கூடிநின்று அவற்றின் பயன்களாகிய சுகதுக்கங்களை அனுபவிக்கும்; ஆதலால் அக்கால முழுதும் 'வாழு நாள்' என்று சொல்லப்பட்டது". அறப்பயிர் செய்து அறவடை யறுத்து அநுபவித்து முடிந்தோர் "வாழாமல் வாழும்" உயர் வாழ்வுபெற்று, தேஹத்தோடிருந்தும், தேஹவாசனையற்று, பயிர்த் தொழிலாம் வினைத்தொடர் முடிந்து சூனியத்துக் கப்பாலுக் கப்பாலாம் சுகவெளியில் விதேஹ கைவல்யம்பெற்று தூங்காமற் றூங்கி ஒரு கல்பகாலம்வரையில் சுகநிஷ்டையி லிருந்திளைப்பாறுவார். அவர்கள் உலகோபகாரமாக உழைத்தாலும் அவர்களுடைய சாந்திநிலை குலையாது சாந்தோப சாந்தராய் சித்தி, புத்தியென்னும் சக்திகளைக் கொண்டு சக்தி கணபதியைப்போல் எடுத்த காரிய மெதையும் நிர்விக்னமாகச் செய்து முடிப்பர். இச்சா சக்தியோடு இரண்டறக் கலந்து நின்று ஞானமாத்திரத்தினாலே எல்லாவற்றினுடைய இயல்பையு மறிந்து சித்தமாத்திரத்தினால் எதையும் சித்திக்கச் செய்யும் கிரியாசக்தி வாய்ந்தவராவார். ஆகையால் வல்லமை யம்மையோடு இரண்டறக்கலந்து அத்வைதமாயிருந்துகொண்டு சித்தி, புத்தியென்னும் பத்தினிகளை இருபுறமும்வைத்து கற்பகவிநாயகராய் விளங்கும் மஹாவல்லமை பொருந்திய சக்திகணபதி இதை பக்தியுடன் வாசித்துணர்ந்து, உணர்ந்தபடி நடக்கும்உண்மையாளர் அபீஷ்டத்தை யெல்லாம் நிர்விக்னமாக நிறைவேற்றிவைப்பாராக. ஓம்; கணபதயே நம:.

ஆகையால்,

"உடம்பினைப்பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினில் உத்தமனைக் காண்"

என்ற ஔவை குறளிற்சொல்லியபடி ஒவ்வொருவரும் அறப்பயிர் செய்து தர்மந்தழைக்க வுழைத்து முடிவினில் அவ்வுழைப்பின் பயனைத் தனக்கு அந்நியமாக நினைத்த நினைவினாலேயே அவ்விதம் காணப்பட்ட புரு

ஷோத்தமனும் கடவுளை "உடம்பினில்" கண்டுபயவேண்டும். கண்டுதேர்ந்தார் உடம்பினை வெறுத்தொறுப்பாரென்பது தப்பெண்ணம். அந்தத் தப்பெண்ணம் அனுபவமுதிர்ச்சியில் தானே நழுவிவிடும்.

"உடம்பினை யிழுக் கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்பிலுள் உத்தமன் கோயில் கொண்டானென்
றுடம்பினை யானிருந்தோம் புகின்றேனே."

என்பது எம்பெருமான் திருமூலதேவர்செய்தருளிய திருமந்திரோபதேசங்களில் ஒன்றாம்.



## "THERE IS ONE THING I FEAR."

There is one thing I fear
Not death, nor sharp disease,
Nor loss of friends I hold most dear,
Nor pain, nor want—not these.

But the life of which men say:
"The world has given him bread;
And what gives he to the world as pay
For the crust on which he fed?"

I would pour out strength, and then
When I have no strength to give,
No use, no share in the lives of men
Who toil and fight and live—

Then let the end come fast,
Whatever my past success;
That I may not cumber the ground at last,
Nor linger in uselessness.

## "அஞ்சுவதொன்றுளதப்பனே!"

"அண்டருக்காநஞ்சருந்தி அம்பலத்திலாடுசிவன்
தொண்டருக்குத்தொண்டனெனத் தொண்டுசெய்வ
[தெக்காலம்."—பத்திரகிரியார்.

I

அஞ்சுவதொன்றுளதய்யனே யுன்னைத்
தஞ்சமென்றடைந்தேன்தயவுசெய்யப்பனே!
அஞ்சிலேன்*காலற்குமாருயிர்வதைக்குமோர்
[வியாதிக்கு
மெஞ்சியதோழர்தந்தேனுறவொழியினுமஞ்சிடேன்:
நஞ்செனவருத்துமோர்நல்குரவஞ்சிடேன் நயமில்
வஞ்சகவாதனையால்வருவேதனைக்கஞ்சிடேன்:
அஞ்சிலேனிவைக் கெலாமாருயிர்த் தோழநின்
செஞ்சடைநிறைச்சென்னி மீதுறை வெண்ணிலா
[வறியவே.

II

அஞ்சுவதொன்றுளதென்னெனிலையனே,
பஞ்சுபோற்பறக்கும்பான்மையதாமிப்பிரபஞ்சந்தா
[னும்
"கஞ்சிவார்த்திவனைக்காத்ததற்கிவன்செய்பிரதியே"
[தென்னக்
கிஞ்சித்துமோராதஞ்சிடச்செய்யும்அம்பெனவுள்ள
[த்து
நஞ்சுபோற்பாயும்நயமில்வார்த்தைக்கஞ்சினேனை
[யே!

† கிஞ்சுகமேந்தியகையுடையம்பிகைகாதலனேயுன்
[றன்
நெஞ்சிலேதங்கியநஞ்சுருக்கெடா அஞ்சியதேவரை
யஞ்சிடேலென்றதன் சக்திபறக்கெட வுண்ட
[னையே!

III

உண்டுமேநஞ்சதைஉலகெலாங்காத்தனை
கண்டுமேதேவர்கள்கரங்கூப்பித்தொழுதனர்
உண்டதோர்நஞ்சுமேஉன்றனுளேசெல்லாது
கண்டத்திற்றுன்நிற்கச்செய்தனள்காதலி!
அண்டத்தைக்காத்தநீபிண்டத்தைவதைக்காதுன்
கண்டத்தில்நிறுத்தியேகாத்தனள்பிண்டத்தை—யப்
பிண்டத்தைக்காத்தவுன்பேரருட்சக்திக்கிப்
பிண்டத்தைகாத்தருள் செய்வது பெரிதாமோ!

IV

பெரிதிலையாதலால் சிறிதுமேயெண்ணுது
எரிதீயிற்பெய்யுமோர் ஆகுதியேபோல
அரிதினிற்பெற்ற விப்பிண்டத்தின் சக்தியை
‡ எரிதீயின்சக்திபால் இசையக்கொடுப்பனுன்:
எரிதீயின் சக்தி 'சுவாஹை'போல் துரியப்
பரியேறிநின்றுநான்பாருக்குழைப்பேன்காண்:
பெரிதிலைசிறிதிலையுடலிலையுயிரிலைசொல்லற்கோ
யரிதரிதென்தாயே!யுன் ஞர்வற்றை சக்திசெயல்!

* காலன்=எமன், மரணம்.

† 'கிஞ்சுகம்'—'கிளி'யேந்தியகை,-அபயஸ்தமாம்.

‡ எரிதீயின் சக்தி "ஸ்வாஹா"

V

* உழைப்பான் "நீ"யுழைத்தா லுலகெல்லாமுய்யுமே
பிழைப்பான்"நான்"பிழைத்தாலுலகெல்லாம் பிழை
[யாதோ !
உழைப்பானும் பிழைப்பானு முழைத்துப் பிழைக்
[கவென்
றுழைப்பொடு பிழைப்பை யுலகினிற்படைத்தைநீ!
உழைப்பொடு பிழைப்டும் பிழைப்பொடுழைப்பும்
[பேதமில் தழைக்கத்
தழைத்திடு முலகம் தருமமுஞ் செழிக்குமே-
[யாதலால்,
உழைப்பானுழைக்கவுடனுழைக்குமுலகேயால்
பிழைப்பான் உழைக்கவுழைப்பேன் † பேருளே
[கதியாமால்.
ஓம்தத்ஸத்.

Friday the 18th Dec., 1908.



THE ACME OF INDIVIDUAL PERFECTION
OR
PARAMAHAMSA: THE SON OF GOD.

"பரமஹம்ஸ :"

"ஹம்ஸ :" என்னும் ஸம்ஸ்கிருத பதம் ஹம, ஸம என்கிற இரண்டு பீஜங்களின் ஐக்கியத்தை யுணர்த்தும். வித்து ஒன்றாயினும் அது உள்ளே இருபகுதியாகி ஒன்றைவிட்டொன்று பிரியாத்தன்மை பெற்றிருப்பது போல, உயிரும் சிவசக்தியம்சம் இரண்டும் கலந்ததாக விருக்கிறது. அதாவது, சலம், அசலம் என்கிற இரண்டும் சேர்ந்ததாகவிருக்கிறது. 'சலம்' என்பது சக்தியம்சத்தைக் குறிக்கும். 'அசலம்' என்பது சிவ அம்சத்தைக்குறிக்கும். 'சிவம்' என்றாலும் 'நலம்' என்றாலும் ஒன்றே. நலமும், சலமும், அக்கினியும், ஜ்வாலையும் போலும், விளக்கும் ஒளியும் போலும், சூரியனும் ரஸ்மியும் போலும். வராஹோபநிஷத்தில் ஸ்ரீ வராஹமூர்த்தியானவர், ரிபுமுனியின் தபஸுக்குகந்து அவருக்குமுன்தோன்றி ஆத்ம ஸ்வரூபத்தை உபதேசிக்கையில், மூலாதாரமாகிய ஆதிகாரணத்திலிருந்து வாயு உண்டாயிற்று; வாயுவிலிருந்து அக்கினி உண்டாயிற்று. அக்கினியிலிருந்து பிந்துவிருத்தியாயிற்று; அதாவது பிரகாசரூபம் தோன்றிவளர்ந்தது. பிந்துவிலிருந்து "நாதவிருத்தி" (Life-pulsations) உண்டாயிற்று. நாதவிருத்தியிலிருந்து ஹம்ஸன் (Life, pure & simple) உற்பத்தியாயிற்று. ஹம்ஸனிலிருந்து மனது பிறந்தது என்று திருவாய்மலர்ந்தருளியிருக்கிறார். மனதிலிருந்து இந்திரியங்கள் உண்டாக, இந்திரியக் கூட்டங்களோடு ஐம்பூதச் சேர்க்கையான உடலம் சேர்ந்து நிற்க, இந்த தேஹம் உண்டாயிற்று என்பது விகசிதம். பின்னும் அவ்வுபநிஷத்தில் தானே, இந்திரியங்களுக்கு ராஜா மனசு; மனசுக்கு ராஜா வாயு;வாயுவுக்கு ராஜாலயயோகம். ஆகையால் நீ லயயோகத்தைக் செய்யக் கடவாய் என்று போதிக்கிறார். லயயோகக்கிரமம் என்னவென்றால்:—பிராணாயம, பிரத்தியாஹாரங்களினால், இந்திரியங்களை வசப்படுத்தி பஹிர்முகப்பிரவிர்த்திவாய்ந்துள்ள இந்திரியங்களை அந்தர்முகப்படுத்தவேண்டும். அதாவது உள்முகமாகத்திரும்பச் செய்யவேண்டும்; ஸ்வப்னாவஸ்தையில் எப்படி இந்திரியங்களெல்லாம் தானே அந்தர்முகப்பட்டு விளங்குகின்றனவோ, அப்படிப்போல, யோகியானவன் பிரயத்தன பூர்வமாக, வெளியே சென்று விஷயங்களைப்பற்றித் திரியும் இந்திரியங்களை இழுத்துக்கட்டி அந்தர்முகப் படுத்தவேண்டும். இப்படிக்கட்டுவதற்கு இரண்டுவித உபாயங்களுண்டு. ஒன்றி, அடங்காதமாட்

---

* நானெனநீயெனத் தத்துவமிரண்டே" யென்னும் திருமந்திரத்தைக்கவனித்து, ஜீவேசுவர ஐக்கியத்தின் மர்மத்தை யுணர்க, "நீ" பதி, "நான்" சீவன். சீவனுக்கந்நியமாய் உலகில்லையால், "உலகெல்லாம் பிழைக்காதோ" வென்றார்.

† 'உழைக்கவுழைப்பேன்' - work for work's sake. நிஷ்காமிய கர்மத்தைச் சுட்டிநின்றது.

டைத் தடிகொண்டடித்து மடக்கிப்பிடித்துக் கட்டுவதுபோன்றது. இதுதான் "ஹடயோகம்" என்று சொல்வது. மற்றொன்று, நல்ல பசுவுக்குப் புல்லைக்காட்டி யழைத்து, அப்புல்லைகொடுத்துத் தொழுவத்தில் கட்டுவது போலாம். இது இராஜயோகம். எப்படியானுலும் பஹிர்முகமாகச்சென்று விஷயங்களிலே விழுந்து சிதறிப்போன மனதான இந்திரியங்களை வசப்படுத்திக் கட்டவேண்டியது முக்கியம். இந்திரியங்கள் வசப்பட்டபின் அவை விஷயாகர்ஷணமாத்திரத்தால் வெளியிற் செல்லாமற் பத்திரமாகப்பாதுகாத்து யோகியின் இஷ்டப்பிரகாரம் பசுமாட்டுக்குப்புல்லைக்கொடுத்து வசப்படுத்துவது போல் சுப்வாசனையால் அவைகளைத் தன்வசப்பட்டியங்கப் பழக்கவேண்டும். பிறகு அதை ஒருமுகப்படுத்த குருவின் உபதேசப்படி குருகொடுத்த லக்ஷியத்தில் அஃதைச் செலுத்த வேண்டும். இதனுல் மனம் ஒருமுனைப்பட்டு நிற்க, இந்திரியங்களெல்லாம் அந்த ஒரு முனையில் ஒடுங்கிநிற்கும். குருகொடுத்த முத்திரையை அப்பியசித்து அதில் நிற்கப்பழகின சிஷியனுக்கு அதற்குவேண்டிய அளவு மாத்திரமாக இந்திரியங்கள் கரைந்து உருப்பட்டு நிற்கும். இதனுல் இந்திரியங்கள் அதற்குக் காரணமான மனதில் கரைந்து பிறகு லக்ஷியத்தில் (குறியில்) மனம் செல்வதற்கு வேண்டிய அளவுமாத்திரமாக உருக்கொண்டு நிற்கும். உதாரணமாக, உபாஸகன் உபாஸிய மூர்த்தியில் மனம் செலுத்தி அதன் ரூபத்தையே தான்கொண்ட குறியாக வைத்து தியானித்து நிற்பானுகில், தைலதாரைபோல் அவன்தியானம் முதிர முதிர தாரணத்தியான சமாதியான யோகஸம்யமத்தில் அந்த உபாஸிய மூர்த்தம் ஒன்றைத்தவிர வேறு எதுவும் அவன் கண்ணுக்குப் புலப்படாதாகும். இப்படியாக, மனசு ஏகீபாவப்பட்டு நிற்குங்கால் அம்மனசுதானும் அதன் காரணத்தில் கரைந்து அச்சில் வார்க்க உருக்கிய தங்கம்போல் "தகதக"வென்று திரவமாய் ஜ்வலித்து நிற்கும். திரவ ரூபமாய் நிற்பது வாயுவாம்;—அதாவது, சலரூபமாய் சலித்துக்கொண்டு சலநத்துக்கிடமாய், சலசக்தி மாத்திரமாய், ஸ்வபாவமாகவே சமநிலைப்பட்டு நிற்பதாய், விளங்கும். இதிலிருந்துண்டாகும் "தக தக" என்று ஜ்வலிக்கும் ஜ்வலிப்பு அக்னிஸ்வரூபமாய் அதற்குக்காரணமான வாயுவின் ஸ்வபாவமான சலித்தல் தனக்கு குணமாக அமைய, அது ஜ்வலிப்பாக விளங்கிநிற்கும். மனது சம்சயாக்னி ஸ்வரூபமானது. வாயுவோ சலன ஸ்வபாவத்தால் நாதஸ்வரூபமானதாய் விளங்கும். ஆகையால் ஏகீபாவத்தால் ஒரு முகப்பட்ட மனசு உபாஸிய மூர்த்தியில், தியானயோக முதிர்ச்சியாம் பாவசமாதியில் லயிக்கும் போது, அதுதிரவமாத்திரமாயிருந்து அதன் சமபாவத்தை யடையும். அச்சில்வார்த்த தங்கம் எப்படி அந்த அச்சிலமைந்து குளிர்ந்து அதில் சூனியமாயுள்ள இடத்தை நிறப்பிக்கொண்டு சூந்யமாயிருந்த ஆகாயத்தில் ஸ்வர்ணமயமான விக்ரஹாரமாக விளங்குகிறதோ, அப்படிப்போல, அதன் காரணத்தில் கரைந்த மனதும் தியேயாகாரமாகி (தியானித்த மூர்த்தமாகி) நாம ரூபமமைந்த "நாத—பிந்து" தத்துவத்தின் விகாரமாக விளங்கும். மனம் சிருஷ்டிப்பது இப்படித்தான். தன்னையழித்துத் தான் நினைத்த உருவாகத் தானே யமைதலால், மனம் சித்தவிருத்திப் பிரவாகமாக விருக்கிறது. இது மனதிற்கு இயல்பாயமர்ந்த ஸ்வபாவமா யிருத்தலால், ஈசுவரனும் இதற்குக்கட்டுப்பட்டேதோன்றி பக்தர்களை இரக்ஷிக்கிருர். பகவத்கீதையில் பகவான் "எவ்வெவர் எப்படி நினைந்தார் அவ்வவர்க்குஅப்பொருளாய்த் தோன்றுவன் யான்" என்று சொல்லியிருக்கிறுரல்லவா. "எண்ணினர்க் கெண்ணினபடி யிருந்தருள் புரியுமீசன்" என்றுர் இதனுண்மை யுணர்த்தவே. கரைந்தமனம் பின்னுமுறைந்து தான்

எண்ணின எண்ணமாத்திரமாகத் தோன்றுவதினால், மனதின் ஸ்வபாவம் இன்னதென்றுணரவனகயேற்படுகிறது. இப்படி மனதை "அழித்தழித்து அம்மணியாச்செய்வதே" எல்லா உபாசனைகளிலும் மேலான உபாசனை. அம்மணியே சிந்தாமணி. இதற்கு "வாலை வித்தை" யென்றுபேர். ஏனெனில் பாலன் எப்படி விளையாட்டை விளையாட்டின் பொருட்டே சிரேஷ்டமாகக் கொண்டு விளையாடுகிறானோ, அப்படிப்போல, மனதை உருக்கிவார்க்கும் வித்தையாம் இதை அதற்காகவே பிரதிபலனைக்கோராது செய்வது பாலை உபாஸனையென்பர். ஏனெனில் "உமாகுமாரி"யாம் ஈசுவரி, இப்படியே சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை பாலலீலையாகச் செய்து வருகிறாளாதலால், அவளை வழிபட்டு, அவளைப்போல் ஜீவகற்பனைக்குள் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் செய்துவரும் இந்த வித்தை அவள்பேரால் விளங்குவதாயிற்று. நாமரூபமாயபைந்துள்ள தோற்றத்தைப் பின்னும் உருக்கி உருக்கி வார்த்துக்கொண்டு போனால், பழக்க விசேஷத்தால் ,மண்ணையுருக்கி மலினத்தை நீக்க அது சுத்தஸ்படிகமாவதுபோல, மனதையுருக்கி யுருக்கிவார்த்து அதன் மலினத்தை நீக்க அது தத்துவதரிசனம் செய்வதற்கியன்ற கூர்மைவாய்ந்த கருவியாய் சுத்தஸ்படிகத்துக்கொப்பான ஸாத்விக மனசாகிறது. இதற்கு சங்கற்போற்பத்தியின் இரகஸியம் தெரியவேண்டும்.

ஸர் ஆலிவர் லாட்ஜ் என்னும் மேற்றிசைச் சாஸ்திர மஹாபண்டிதர் ஆங்கிலேய மனோதத்துவ விசாரச் சங்கத்தின் (Psychical Research Society of England) முக்கியஸ்தராயிருந்து, அச்சங்கத்தாருக்காகப் பேசுங்கால், "மனதிலுதிக்கும் எண்ணம் (சங்கற்பம்) பௌதிகப் பிரபஞ்சத்தில் தோற்றுவதாகும் வழியெப்படி யென்பது லவலேசமும் தனக்கு விளங்கிற்றில்லை: வேறு யாருக்கும் விளங்கினதாகவுமில்லை" யென்று உறுதி கூறுகிறார். ஐயோ பாவம்! இவருக்கும் இவருடனுழைக்கும் மேதாவிகளுக்கும் ஒருவித பிரகிருதி மர்மம் தோன்றாவிட்டால், மற்றெவர்க்குமே அது தெரியாதென்று சொல்வது எப்படி பொருந்தும். இது ஒருவித வித்யாகங்காரமாம். அவித்தையுள்ளமட்டும் அகங்காரமும் கூட இருந்து கொண்டுதானிருக்குமாதலால், அவர் அகங்கரித்தெழுதினதைப் பற்றி நாம்சிறிதும் ஆச்சரியப்படவில்லை. இந்தியாவில் ஆத்மஞானம் பெற விரும்புவோர் பெறும் முக்கிய தீக்ஷைகளில் பிரதமமானது "சங்கல்போதயம்" உண்டாகும்விதத்தையறிவதாயிருக்க, இதை யாருமேயறிந்திலர் என்று சொல்வதைக்கண்டுநம்மில் உயர் தீக்ஷைபெற்றவர்கள் நகையாதிரார். ஆனால் இந்த மர்மத்தைகுருவும்சிஷ்யனுக்கு வாக்கால்ஓதியுணர்த்தார். ஏனெனில் பிரகிருதிமர்மங்கள் ஒவ்வொன்றும் ஆவர்ண பூஜைசெய்து அவைதக்காக்கும் யோகினி கணங்கள் சித்தி தேவதைகள் முதலான ஆவர்ண—அதிஷ்டான தேவதைகளைப் பூஜைசெய்து அவைகளைத் திர்ப்தி செய்தபின்னரே, பிரகிருதி சந்நிதானத்தில் அவள் அருளால் அறிவிக்க அறியவேண்டுமேயன்றி, சொல்லால், எழுத்தால் அறிவது அசாத்தியமாம். ஏனெனில் நாம் முன்னமேயே சொல்லியிருக்கிறபடி பிரம்ம வித்தை, ஸ்ரீவித்தை, வீண்வாச்சா மாத்திரமானதன்று.

"எழுதாப் பொத்தகத்தின் ஏட்டின் பொருளைத்
தெருளாத கன்னி தெளிந்திருந்தோத"

என்ற திருமந்திரப்படி, வாக்கும் மனமும் இறந்த இடத்தே முகக்கண்விட்டு, அகக்கண்ணால் அறிந்துணரவேண்டியது.

"முகத்திற்கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்திற்கண்கொண்டு பார்ப்பதே யானந்தம்
மகட்குத்தாய் தன்மணாளனோடாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா
[றெங்ஙனே.

என்பது திருமூலதேவர் அருளிச்செய்த திருமந்திரோபதேசம். ஆகையால் வாச்சா மஹோசரமானதை வார்த்தையால் தெரிவிப்பதெப்படி? சாத்தியமல்லவாயினும் "உரையற்ற தொன்றை உரைசெய்யும் ஊமர்காள்" என்ற திருமந்திரப்படி, அனுபவசாலிகளுக்கும் அப்பியாஸிகளுக்கும் ஒருவாறு குறியாமற் குறித்துச் சொல்லாமற் சொல்லலாம். அதாவது "காட்டுக்குறியும் கடந்ததோர் காரண"த்தைக் காட்டவேண்டுமானல் முடியாது. ஆனல் மரத்திலுள்ள கிளைகளின் நடுவேயுள்ள இடைவெளியைக்காட்டிஅதன் வழியாகச் சந்திரனைக்காட்டுவது போலவும், துருவநக்ஷத்திரத்தைக் காட்டி அருந்ததி காட்டல்போலும், லக்ஷிய திருஷ்டியுள்ளவர்களுக்கு லக்ஷியத்தைக்கொண்டு லக்ஷியத்தின் உட்பொருளைக் காட்டலாகும். இந்த சங்கல்பவசம் பெற்ற சித்தரொருவர் அவர் அனுஷ்டித்த லக்ஷியத்தைக் குறித்துதான்சங்கல்பவசம் பெற்றதைப்பின்வரும் விதமாய்க் கூறியிருக்கிருர்.

"வாலையென்னுமம்பிகைப்பெண்வடிவென்னுத்தாள்
காலைவந்து மாலையிட்டு மடியில் சேர்ந்தாள்
பாலையீன்றவள் வழலைவாங்கி விசுத்தி பார்த்தாள்
மாலையீன்றமாதுபங்கன்கழல்பணிந்து
[வலிந்தழைக்கக்கடுகவந்தே வசியமானள்.',

சங்கல்பத்துக்கு அதிஷ்டான தேவதையான "பாலாம்பிகை" என்று சொல்லும் "வாலையம்மன்" தனக்கு இஷ்டதேவதையாக வந்தமரும்படி வாய்க்கப்பெற்ற மர்மத்தைச் சொல்லியவர் பின்னும் சொல்லுகிருர்:—

"வசியந்தானு மானளவள் கற்பென்னரசி
கசியமனம் கரைந்துபொங்கிக் கருணைபொழிவள்
வசியமாக வேண்டுமப்பா மனவன்மைமெத்த
கசியமனம் கரைந்துபொங்கி வன்மைப்பட்டால்
[கட்டழகி வலுவில்வந்தே வசியமாவள்."

சங்கல்பத்துக் கதிஷ்டான தேவதையை வசியஞ்செய்யும் வகையைச்சொல்லி, அவள் வசியமான விடத்து நிகழும் விசேஷத்தைப்பின்னர் கூறுகிருர்:—

"வசியமானல் கட்டழகிபசியுங்காணு தசியுமாவாய்
நசியாதிவ்வுடலங்காண் நாதபிந்து சேர்ந்தால்
பசியாதென்று சொன்னதுவும் பரமரகசியம்
நசியாத இவ்வுடலை நீ நயந்துபாரே."

'அசியுமாவாய்,' என்றது "தத்துவமஸி" மஹாவாக்கிய லக்ஷியாப்பியாசத்தில், தத்பதம், துவம்பதம், அஸிபதம் என்றுள்ளமூன்று பதங்களின் பதார்த்த, வாச்சியார்த்த, லக்ஷியார்த்தங்களை யறிந்தவர்களுக்குத் தானக விளங்கும் தாதாத்மிய சம்பந்தத்தைக் குறிப்பிட்டுச் சொல்லியதாம். அதாவது கட்டழகி வசியமானல், தாபத்திரயங்களும் தீர்ந்து சாந்தோபசாந்தனய் "நீயே அவளாகும்" திபேயாகாரசித்தி லபிக்கும் என்று சொல்லாமற் சொல்லியதாம். இரண்டாமடியில் "நாதபிந்துசேர்ந்து" அதனலுண்டாகும் "இவ்வுடலம்" (இந்தக்காரண சரீரம், இதை வித்யா சரீரம் என்றும், இது மந்திர சக்திகளுக்கு இருப்பிடமானதென்றும் சொல்வர் மேலோர்) "நசியாது"—மஹாபிரளயத்திலும் சாத்விக சேஷமாத்திரமான சுபவாசனையாக மறைந்திருந்து ஆபதோத்தாரண மூர்த்தியின் திருவடித் தாமரையிலிருந்து மறு சிருஷ்டிகாலத்தில் அதன் ஸம்ஸ்காரத்துக்கேற்ற உயர்தேஹ மெடுப்பதால் இந்ததேகம் பிரளயகாலத்திலும் அழியாது என்று வற்புறுத்துவான் 'நசியாது' என்று சொன்னர். (ஞானவாசிஷ்டத்தில் புசுண்ட யோகி சரித்திரம் பார்க்க.)

பசியாதென்று சொன்னது தாபத்திரயாதிகளில் ஆதிபௌதிகம், ஆதிதெய்விகம் இரண்டும் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களோடு கழன்றுபோக, எஞ்சி நின்றதும் காரணசரீரத்துக்குரியதுமான ஆத்தியாத்மிகதாபத்தினிவாம் சாந்தோப சாந்தத்தைக் குறித்துச்சொன்னதால் அது "பரமரகசியம்" எனக்கூறினர். இப்படிப்பட்ட அஞ்ஞானத்தின் ஸ்வரூபமே

யான ஆனந்தமயகோச மாத்திரமாய் வித்யா சரீரமாம் "நசியாத இவ்வுடலை" "யந்தராரூடானி" என்றபடி இந்தச் சரீரத்துக்கும் அப்பாலாய் இதிற்புகுந்து ஆட்டுபவனும், இதற்குச் சாக்ஷியாயும் உள்ள "அறிவுமயமாய" "நீ"—"நயந்துபாரே"—நயம் பொருந்திய உனது ஞானக்கண்ணும் அறிவால் கடாக்ஷவீக்ஷண்யம்செய்து பார்ப்பாயாக—என்றபடி.

பின்னால் அந்தக் காரணசரீரத்தைப்பார்க்கும் வழியைச்சொல்கிறார். அது சித்தர்கள் உபயோகிக்கும் பரிபாஷையில் சொல்லப்பட்டிருப்பதாலும், அதனுட்கருத்தை தீக்ஷை பெற்றவர்களுக்கன்றி மற்றவர்களுக்குச்சொல்லுதல் கூடாதாகையாலும், அவர்களும் தீக்ஷாபரராய் சாக்ஷாத்கார சித்திபெற்ற குருவையடுத்து அவரது அருளினால் குருமுகமாய் நேர் நேரிலிருந்தப்பியசித் தறிய வேண்டுமாகையாலும், அதைப்பற்றி இங்கே வளர்த்தியெழுதுவதில் பயனில்லை. ஆங்கிலேய மனோதத்துவ விசாரசங்கத்தாருக்கு அசாத்தியமானது இங்கே கஷ்ட சாத்தியமாயினும், முக்திவழிக்கு இன்றியமையாத பரமசாதகமாக, அதற்கியைந்த சாதனங்களோடு அனுஷ்டிக்கப்பட்டுவருகிற தென்பதைக் காட்டுவான் பொருட்டே இம்மட்டும் விவரமாயெடுத்து விளங்கக்கூறினோம்.

ஆகையால், சூக்ஷ்மதேகவாசியான தைஜஸாத்மனுக்கு நாமரூப மாத்திரமாகப்படும் தோற்றங்கள், காரணசரீரவாசியான ப்ராஜ்ஞனுக்கு "நாத-பிந்து" தத்துவங்கள் சேர்ந்துள மாத்திரமாகத் தரிசனமாகும். இதில் பிந்து சிவனம்சம், நாதம் சக்தியம்சம். "நாதவடிவாகிய மஹாமந்திராதி ரூபியே" என்றார் தாயுமானவரும். நாதம் தத்துவங்களில் மிகமேலானது. "பூதமுதலாகவே நாத பரியந்தமும் பொய் யென்றெனைக் காட்டி" யென்றதனால் ஸ்தூல சூக்ஷ்ம காரணமான மூவகைத் தேஹங்களும், முறையே அவற்றிற் குரித்தான ஜாக்ர, ஸ்வப்ன, சுஷுப்தி யென்னும் திரிவித அவஸ்தைகளும் "பொய்", அதாவது, மாயாத் தோற்றம் என்று பிரத்தியக்ஷமாக ஏற்படுகிறது. கானலிற்சலம்போல் இவை தத்துவங்களின் விகாரத் தோற்றமேயன்றி இவற்றில் சாசுவதமான பார்வையில்லையென்பது கருத்து. இந்த நாத-பிந்துவும் கடந்தவிடத்து, இவற்றின் அதிஷ்டானங்களாகிய "வாயு"—"அக்னி" அதாவது "சலன சக்தி—நிச்சலன சக்தி" யிவ்விரண்டும் சாக்ஷாத்காரமாகதரிசனமாகும். இவற்றிற்கு "Kinetic Energy," "Static Energy," யென்று இங்லீஷில் பேர்சொல்லுவர். சலனசக்தி விஷ்ணு ரூபசூரியனிலும், நிச்சலன சக்தி அக்கினியின் ஸ்வஸ்வரூபமான நித்த சுத்த நிர்மலஸ்வரூபமாம் நிருபாதிக ஸ்வயம் பிரகாசத்திலும் ஒடுங்கும். இவ்விரண்டுக்கும் சிவ-சக்தி சம்பந்தமான அபேதமான உறவைச் சாக்ஷாத்கரிப்பதே அத்வைத ஞானமாம். இதை அப்பர்ஸ்வாமிகள் பின் வருகிறபடி வெகு அழகாகப்பாடி யிருக்கிறார்:

"எரியலால் உருவமில்லை ஏறலால் ஏறலில்லை
கரியலாற்போர்வையில்லை காண்தகுசோதியார்க்குப்
பிரிவிலாத்தேவர்கூடிப் பெருந்தகைப்பிரானென்
(றேற்றும்
ஹரியலால் தேவியில்லை ஐயனையாறனார்க்கே."

இது அவர் முக்திபெற்ற ஸ்தலமாம் திருவாதியென்னும் பஞ்சநத க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிராநின்ற 'ஐயாறப்பன்' என்கிற பஞ்சநதீசுவரர் சந்நிதானத்தில் பாடப்பட்டதால் அவருக்கு குருமூர்த்தமாய் வந்தமர்ந்த ஐயன் "ஐயாறனாரை" அத்வைத பிரஹ்மமாக ஸ்தோத்தரித் துள்ளார்.

இப்படி யுலகெலாம் சிவ-சக்திரூபமென்று அறிகிறவன் ஹம்ஸன். இவன் உடலற்று உயிரேயாகி பிரணவஸ்வரூபமாய் நிற்பன். தன்னை சிவ-சக்தி ரூபமாயறிந்த இவன் தன் னுவமானத்தால்மேன்மேலும் ஆராய்ந்து எங்கும் இந்த

சிவ-சக்தி ஸ்வரூபத்தை யன்றி வேறில்லையென்று "சிவ-சக்தியைக்கிய-ஸ்வரூபிணி"யாயிருக்கும் தேவியை பரைபோகத்தால் சாக்ஷாத்காரமாயறிந்துள்ளவன் எவனோ அவன் பரமஹம்ஸன். ஹம்ஸம் என்பது அன்னப்பக்ஷிக்கும் பேர். இந்த அன்னப்பக்ஷியானது எப்படி பாலோடு சேர்ந்த நீரிலிருந்து பாலைப்பிரித்து நீரைத் தள்ளி யுண்ணுகிறதோ அப்படிப்போல எல்லாம் சிவ-சக்தியைக்கிய ஸ்வரூபமேயன்றி வேறல்லவென்றுணர்ந்து தேர்ந்தவன், நல்வினை-தீவினை யிவற்றின் பிரவாகமான காலவோட்டத்தில் தீவினையைத் தள்ளி நல்வினையைப் பிரித்துண்டு புண்யம் வளர்த்துப் புனிதனாகித் தன் வித்யா சரீரத்தை வளர்த்து அவித்தை வாசனையை வளரவிடாமல் ஒடுக்கி வித்யாபூரணனான பரமஹம்ஸ நிலையில், வித்தையவித்தை யிரண்டும் ஒன்றேயன்றி இரண்டல்லவென்று அறிகிறான். அறிந்தவன் அத்வைதஞானம் நழுவாது ஆரோஹணம் முடிந்து அவரோஹணமாய் இறங்கிவருகையில், அநாஹதஸ்தானத்தில் சிவ-சக்தி ஸ்வரூபத்தை ஹம் ஸம் என்கிற பீஜங்களால் ஆண் பெண் அன்னங்களாக இணைபிரியாது அபேதமாக விளையாடிக்கொண்டிருக்கக் காண்கிறான். "முனிமானஸஹம்ஸ:" முனியினுடைய மனஸாகிய நீரோடையில் நல்லதைப்புசித்துத் தீயதைத்தள்ளி விளையாடிக்கொண்டிருக்கும் ஹம்ஸரூபமாகத் தனது அத்வைதஞானம் விளங்கக்காண்கிறான். "பக்தமானஸஹம்ஸ:" என்னும் இரகஸ்ய நாமத்தின் பொருளும் இதுவே. இதைத்திருமூலதேவர் பின்வரும் திருமந்திரத்தில் வெகு அழகாய்ச் சொல்லியிருக்கிறார்:—

"அன்ன மிரண்டுள ஆற்றங்கரையினில்
துன்னியிரண்டுந் துணைபிரியாதன்னம்
தன்னிலை யன்னம் தனியொன் றென்ற தென்றக்கால்
பின்னமட அன்னம் பேறு அணுகாதே."

நல்வினை தீவினைப்பிரவாகமாக ஓடுகிற உயிர்ப்பிரவாகமாம் ஆற்றங்கரையினில், ஹம் ஸம் என இரண்டு உள. இவையிரண்டும் துணை பிரியாது. இவற்றில் தானே தானாய் நிராமய நிராலம்பமாய் நிற்கும் ஸோஹம் என்றதிலிருந்து "தன்னிலை"யாக நின்று "ஓம்" என விளங்கும் பிரணவஸ்வரூபம், "ஒன்றது"—"ஒன்று" என்கிற கணக்குக்குட்பட்டதென்று சொல்லப்படுமாயின், அந்த ஒன்றுக்கு வேறாய் பின்னப்பட்டு நிற்கும் "மட அன்னம்"—அன்னப்பேடு மோக்ஷப்பேறு பெறுதுபோமே! ஆதலால், "துணைபிரியா" "ஹம்ஸம்"—இவையிரண்டும் 'துன்னி' ('ஹம்ஸ:' எனவும் 'ஸோஹம்' எனவும் பொருந்தி), —"தன்னிலை"—தானே தானாய்நிருபாதியாய் நிற்கும் (ஸோஹம் - என்பதில் உபாதியான ஸகார ஹகாரங்கள் நீங்கச் சேஷித்துள்ள அர்த்ததன்மாத்திரையான ஓம் நிற்கும்) ஹம் ஸோஹ ஸப்ததன்மாத்திரையான பிரணவ ஸ்வரூபம் "ஒன்றது"—ஒன்று என்கிற வரையறைக்குள்பட்டது "என்றக்கால்," 'ஸாந்தா' என்று சொல்லிய இரஹஸிய நாமரூப 'ஸ:' என்பதின் லக்ஷியார்த்தப்பொருளாம் ஹ்ரீநாம சக்தி பின்னப்பட்டுப்போகிறபடியால் சக்திமானோடு அபேதமான தாதாத்மிய சம்பந்தப் பேறுசித்திக்காமல் போகிறதே! அப்பொழுது உபாஸகன் சாக்ஷாத்காரமாய்க் கண்டு அனுபவித்த அத்வைதஞானம் பொருந்துதலின்றி பின்னப்படுவதால், "ஆற்றங்கரையில்" "அன்னமிரண்டுள" என்று சொன்னது, "துன்னியிரண்டுந் துணைபிரியாதன்னம்," ஆகையால் "இரண்டு" என்கிற கணக்குக்குள்பட்டது அல்ல. "பின்னமட அன்னம்பேறு அணுகாதே" யென்றதினால் "ஒன்றது" என்றதும் பொருந்தாது. "ஒன்று" என்கிற கணக்குக்குட்பட்டதுமல்ல. இப்படி இரண்டும் அல்ல, ஒன்றும் அல்ல என்றிருப்பதை எப்படி யறிகிறதென்றால், "ஏகமேவாத்வதீயம்" என்றசுருதிவாக்கியப்பிரமாணத்தாலேயும், நித்யமுத்த நிர்விகற்ப ஸ்வானுபவத்தாலேயும், இவ்விரண்டுக்குமுள்ள பொருத்தத்தைக் காணும்

தெள்ளிய அறிவுருவாம் "பரமஹம்ஸ:" ஸ்வரூப யுக்தியினாலேயும் தெளிவுறத்தெளிந்தாராய்ந்து, திட அப்பியாசத்தால் அநுபவம் உறுதிப்பட்டுஸ்திரப்பட அப்பொழுது, உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உள்ளதுள்ளபடி சுலபமாகக் கண்டனுபவித்திடையருத ஆனந்தத்திலமர்ந்து நித்யசுகம் பெறலாம். இதற்கு குருசிஷ்யபாவம், முதலில் தீக்ஷை பெற அவசியமாதலால், குருசிஷ்ய சம்பந்தத்தின் உண்மையை விளக்குங்கால், இம்மந்திரத்தை உன்னி இதன் கருத்தை வினவிய நமது நண்பரும் இவ் விவேகசிந்தாமணிக் கமிட்டி மெம்பர்களில் ஒருவரும், மதுரை பிரஹ்மஞான சபைத்தலைவருமாகிய பிரஹ்மஸ்ரீ ப. நாராயணய்யர் அவர்கள் வேண்டுகோளின்படி அவர் அனுப்பியதோர் வியாஸத்தை மற்றோரிடத்தில் பிரசுரிக்கிறோம். மந்திரங்களின் உண்மையை ஞானதிருஷ்டியினால் அறியவேண்டியதென்று சொல்வார் மந்திர-திருஷ்டாக்களான மூதறிஞர். மூத்தோர் சொல் வார்த்தையமிர்தமெனக் கொண்டு, எம்பெருமானுன நந்தியருள்பெற்றநாதனும் மூலனைத்தியானித்து தியோகாரமான அவஸ்தையில் அடியேனுக்கருளிச்செய்த இரகசியார்த்தத்தை ஒருவாறு சொல்லாமற் சொல்லி ஊமையன் ஜாடையாக உணர்த்தலானோம். உண்மையை யறிய விரும்புவோர் எம்பெருமான் திருவடிக்கமலத்தைத் தியானித்து, தியான முதிர்ச்சியில் சித்திக்கும் பாவசமாதியில் "அவனருளால் அறிந்துய்யக் கடவர்."

ஸௌந்தரியலஹரியில், அநாஹத சக்கிரத்திலே தேவியைத் தரிசிக்கு மியல்புரைக்கும் மந்திரத்தைப் பின்வருமாறுமொழிபெயர்த்திருப்பதையும் இங்கே யெடுத்து வரைகிறோம்:—

"முன்னைத் தபோதனர்தமிதயமானவாவிமுதுஞான
முளரி நறவார்ந், தன்னத்தின் வடமொழிப் பெயர்
பெற்றுமொழிபயலுமறுமூன்று விஞ்சைவிரிவாற்,
பன்னப் பொதிந்ததீ வினைநீரி னற்குணப்பால்
பிரித்துண்டுகளியா, மன்னப் படுஞ்சிறைப் புள்ளி
ணையை நாடொறும் வழுத்துதுமலர்ச்சமலையே."*

* ஆன்மாக்களிடத்து இருவினையுங் கலந்திருத்தலின் 'தீவினைநீரிற் குணப்பால் பிரித்துண்டு' என்றது. 'முதுஞானமுளரி' என்றமையால்' அதன் 'நறவு' பேரின்பத்தேன் என்க. அன்னத்தின் வடமொழிப்பெயர் ஹம் ஸம். ஹம்-சிவபீஜம். ஸம்-சக்திபீஜம். ஹம்ஸமந்திரம் சிவஞ்சக்திகட்குரிய தென்பது இது பற்றியே. 'அறுமூன்றுவிஞ்சை'—18-வித்தைகள்; அவையாவன:—வேதம்-4; உபவேதம-4; வேதாங்கம்-6; மீமாஞ்சை, நியாயம், புராணம், ஸ்மிருதி என்னும் உபாங்கங்கள்; ஆக 18. அப்புட்கள் ஒலித்த ஒலியே இப்பதினெட்டு வித்தைகள் என்பது. 'பன்ன' ஆன்மாக்கள் ஆராயத்தொடங்க. 'மன்னப்படும்' நிலைக்கப்படும். சிவனுந் தேவியும் அநாஹதத்தில் இரண்டன்னங்களாய்க் காணப்படுதலின் 'புள்ளிணையை வழுத்துதும்' என்றார்."

[இம்மந்திரத்தின் வியாக்கியானத்தை யுணர்கையில், ஸ்ரீ சங்கரபகவான் அநாஹத சக்கரத்தில் தரிசனம் விளக்கொளிபோல் ஜோதிரூபமாகக் காணப்படுகிறதா அநுபவமுரைத்திருப்பதால் இதில் வித்தியாஸமிருப்பதாக நினைத்து மயங்குவர் அநுபவமில்லாதார். அப்படி மயங்கக்காரணமில்லை. ஏனெனில் ஔவை குறளில் "தூயவொளி காண்டல்" என்னும் அத்தியாயத்தில்,]

"தெளிவாய தேச விளக்கொளியைக் காணில்
[விளியாய வீடதுவே யாம்" என்றவர் பின்னும்
"மின்மினி போன்ற விளக்காகத் தான்றோன்றில்
[அன்பை பறவையே யாம்."

என்று சொல்லி யிருப்பதைக்காண்க.

# THE GOSPEL OF "STRENUOUS LIFE" OR, COORDINATION OF CAPITAL AND LABOUR.

"Work to live and live to work."

## "பிழைக்கும் வழி: உழைக்கும் வழி."

(ஸ்ரீ ஸத்யாநந்த சாந்த சர்மா எழுதியது)

I

"பிழைக்கும்வழி உழைக்கப்பழகுவ"தென்றாருண்மையே!
உழைக்கும்வழியை உரைத்திடக் கேண்மினோ:
உழைப்பெனப்படுவது இழுக்கறப்பிழைத்தலாம்;
பிழைப்பும் உழைப்பும் பிழைபடாச்செல்வம்:
உழைப்பவன் பிழைப்பன், பிழைப்பவன் உழைப்பன்;
உளவறிந்துழைப்பான் உண்மையிற்றலைவன்;
பிழையறப் பிழைப்பவன் பெரியோனவன்;
உழைப்புக்கும் பிழைப்புக்கும் ஒற்றுமை வேண்டும்;
உழைப்பொடு பிழைப்புமே யொன்றாகில்
நுழைவழி கண்டு நுழைந்திடும் வறுமை,
பிழையறப் பிழைக்கும் வழியுமே தேயும்,
ஏழைகள் வருந்தக் கோழைப்படுமறம்;
கோழைப் பட்டுக் குன்றும் அறமாயின்
ஏழைமைப்பட்டு அழிந்திடும் ஆக்கம்;
அழிந்திட ஆக்கம் குறைந்திடும் ஊக்கம்;
எப்படியென்பது இயம்பக்கேண்மின்:—

II

"உழைப்பவ னுழைத்தும் பிழைப்பில னாகில்
பிழைப்பவ ரெல்லாம் பிழைபடு செல்வராம்;
பிழைப்பேஉழைப்பும் உழைப்பேபிழைப்புமாய்
ஏழைக்கிரங்கு மீசன் படைத்தான்;
பிழைபட அவன்விதி யெல்லாம் பிழைபடும்;
ஏழைகள்எளிமையில் வருந்தியேநலிவர்;
கோழை மனத்தர் குவித்திடுவர் தனம்;
பாழையுழுது பண்படுத்தவாற்றார்
ஏழைகளழுதிட ஏய்த்துப்பிழைப்பர்;
ஊழைப் பெரிதாய் உகந்துமேகூறி
கூழைக்குடித்துப் பாழையுழுவென்பர்;
உழுதுழுதுழைத்தவன் கூலியைப்பிடித்துப்

பொழுது போனதும் பழுதுபாராட்டுவர்:
பழுதுகள்சொல்லி யுழுதவன்கூலியை ஓட்டப்பிடிப்பர்;
உழுதவன் அழுதுயிர் ஓட்டிப் போகப்
பழுது சொன்னவன் பணத்திற் பெருப்பன்."

III

"பணம் பணமென்று பணவாசைப்பட்டு
பிணமதுபோலும் பணத்தைச் சுமப்பர்;
பணத்தைச்சுமப்பர் குணத்தை மறப்பார், பின்
மாசுணம்போலுண்டு மயங்கிக்கிடப்பார்;
காசுபணம்வேண்டிக் கர்மத்தைமறப்பார் *
தாசிவேசியோடு நேசித்திருப்பர்;
ஊசிமுனை மேல்நிற்கும் உள்ளறிவதனை
வேசியருறவால் நேசியா தொழிவர்;
காசிராமேச்வரமென்று பேசியே திரிவார்
நாசிமேல் நாட்டம்வைத்து வாசியை யறியார்;
கூசிடாது பணத்தைக் குவித்துமே வைத்து
புசிக்கும்வகை யறியாது புலாலை வளர்ப்பார்;
நேசித்துப் பானத்தை வானத்தை யொறுப்பார்
பூசித்துநேசித்த புண்யத்தைமறப்பார்;
ரேசித்துப்பூரித்து வாசிவசம்செய்யார்
வாசித்திவழக்குரைத்து வகைமோசம்போவார்."

IV

"வகைமோசம் தாம்போவார் பகைமோசம் செய்வார்;
நகைமோசம் † செய்தவர் ஊர்மோசம்செய்வார்;
வகைவகையாப் பேசியவர் வார்த்தைகளை வளர்ப்பார்;
சிகைசிகையா ‡ வேதத்தைச் சீச்சியென்றொறுப்பார்
பகையென்றும் உறவென்றும் பாராது பேசியவர்
நகையென்றும் நட்டென்றும் பணத்தையே சேர்ப்பார்;
வகைவகையா அவர்செய்யும் மோசத்தைச்சொல்லில்
பகைபகையாச்சொன்னோரைப் பகைத்துமே காய்வார்;
ஆகையினாலேஅனைத்தையுஞ்சொல்லாது இனத்தையே கோறி
ஊகையினாலேயிதை உணர்ந்திடுமென்றுரைப்பேன்."

V

"ஏழைகள் பிழைக்கும் வழியெதுவென்றேசில்,
கோழைகள் தாமாகிக் குழையாது பிழையாது
ஏழைக் கிரங்கும் ஈசனே துணையென்று
ஊழைக்கண்டஞ்சாது ஊழ்வினையை வளர்க்காது

* கர்மம் வளரும் தர்ம விதியை மறப்பார்.
† பொய்ச்சிறிப்புக்காட்டி.
‡ குடுமிவைத்தவர் = குடித்தனக்காரர் ஒவ்வொருவரும்.

நாழிகை தோறும் நமனுண்டென்றஞ்சாது *
ஊழிழிகாலமா யுள்ளதொரு ஆத்மன்
† ஆழி கையேந்தியே ஏழைதம் முள்ளத்தில்
நாழிகைதோறும் ஆள்கிருனென்றெண்ணி
கோழை மனத்துடைக் குணக்கேடரைவிட்டு
‡ ஏழைபங்காளன் இனத்தோடே சேர்ந்து
"உழைப்பேனுழைப்பேனுய்யவேயுழைப்பேன்"
"இழைப்பேனிழைப்பேன்வல் விதியையுமிழைப்பேன்" $
என்றுறங்கொண்டு உள்ளத்தேயுணர்ந்து
கன்றுதன் தாய்பால் குதித்தோடுமாபோல்
"ஊருக்குழைத்துநா னூதாரியாவேனென்"
றூரையும் தஞ்மென் றஞ்சியடையாது
பேரையும் ஊரையும் பெரிதாகவெண்ணுது
சாரையும்பாம்பும் சேர்ந்துறையுந் தன்மைபோல்
தானுந்தன்னீசனுஞ் சேர்ந்துழைக்கவல்லீரேல்
ஏழையும் பிழைக்கலாம் ஏழுலகும் ஆளலாம்
இது சத்தியம் சத்தியம், சத்தியமிது சத்தியம்."

---

அப்படி ஆளப்பெற்று "அணைந்தோர் தன்மை"யை எம்பெருமான் திருமூலர் சொல்லக்கேளும்:—

"ஆராலுமென்னையமட்ட வொண்ணுதினிச்
சீரார் பிரான்வந்தென் சிந்தைபுகுந்தனன்
சீராடி யங்கே திரிவதல்லாதினி
யார் பாலுஞ்சாராவறிவறிந்தேனே."

"ஒன்று கண்டீருலகுக் கொரு தெய்வமும்
ஒன்று கண்டீருலகுக்குயிராவதும்
நன்று கண்டீரினி நமசிவாயப்பழந்
தின்றுகண்டேற்கிது தித்தித்தவாறே."

ஓம் திருமூலன் திருவடிகளே சரணம்.

---

* தேஹோஹம் என்கிற பாவனையினலேயே சாவுக்கஞ்சும் பயமுண்டாகிறது.

† சக்ரதாரனாய்

‡ சத்துக்களுடைய சாதுசங்கம் பாராட்டி.

$ "தான் முன்னஞ்செய்த விதி வழிதானல்லால், வான் முன்னஞ்செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை" என்பது திருமந்திரம்.

## KUNDALINI-YOGA PRADEEPIKA.

### III. THE ORIGIN OF THE 'MALADY OF THOUGHT.'

## குண்டலினியோகப் பிரதீபிகை.

### 3. "ஆதிமூலம்."

"ஆதி" யென்றால் அந்தக்கரண வாசனை யிலிருந்துண்டாகும் "பவநோய்" என்றும், அந்த ஆதியே மோஹத்தினால் தடித்து "உடற்பிணி"யாம் வியாதிக்குக் காரணமாகிறதென்றும் முதலிரண்டு அத்தியாயத்தில் விளங்கச் சொன்னோம். இப்பொழுது "அந்தக்கரண வாசனை"யாம் ஆதிமூலத்தைப்பற்றி விசாரிக்கப்புகுமுன், அந்தக்கரணவாசனை என்பது என்னமாக உண்டாகிறதென்று சற்றுஊன்றி விசாரிக்கத்தக்கது. "மந்திரத்தில் மாங்காய் விழாது" என்பது எப்படி உண்மையோ, அப்படியே, கேவலம் பேதபுத்தியால் மட்டும் இதை யறிந்துவிடலாமென்பது துர்லபம். அபேதபுத்தியாம் ஞானம் லபிக்காதவர்கள் சிரவண மனனாதிகளால் மனோசுத்தியடைந்து பக்தி சிரத்தையினால் குருவை யடுத்து வழிபட்டு "குருவருள்" என்று சொல்லும் அபேதபாவ உணர்ச்சியினால் உண்மையராராய வேண்டுமேயன்றி, "கண்டதேகாட்சி கொண்டதேகோலம்"என அடங்காதமனத்தினராய், "தான்தோன்றித் தம்பிரானாய்த்" திரியும் அகங்கார மமகாராதி விலங்குகள் தரித்து நானும் உண்மை விசாரிப்பேன் என்று அகங்கரித்துப் புறப்பட்டால் அதனால் பிரயோஜனமில்லை. ஏனெனில் உண்மை சித்ரூபமானதால், அதை அறிவுருவாயிருந்து ஆராய வேண்டும். அப்படி அறிவுருவாய் நிற்கத்தனக்கு சாத்தியமில்லையேல், அறிவுருவாய் நின்றிலங்கும் மஹான்களையடுத்து, அவர்களுக்கு வேண்டிய சிஷ்ருஷைசெய்து அவர்கள் மனமுவந்தேற்க அவர்களுக்குத் தன்னைத் தத்தமாய்க்கொடுத்து அவர்களோடு ஏகீபாவப்பட்டு நின்று, குருசிஷ்ய அபேதம் லபித்த அந்த நிலையில் குருபக்தியோடு குருமுகமாய் விசாரித்தால் அப்பொழுதுவிளங்கும். "அகங்காரத்தை விட்டொழித்தால் அறிவீர் நீர் அதிசயத்தை" யென்பது ஆனந்தத்தாய் மொழி.

"சிவனைவழிபட்டா ரெண்ணிலிதேவ
ரவனைவழிபட்டங் காமாறொன்றில்லை
யவனை வழிபட்டங் காமாறுகாட்டுங்
குருவை வழிபட்டாற் கூடலுமாமே."

என்பது திருமந்திரோபதேசம்.

"அன்னையுந்தாயும் முன்னறிதெய்வம்" என்றார் ஔவையார். அதாவது, தாயும்தகப்பனுமே முதல்முதலில் நமக்குப்பிரத்தியக்ஷ தெய்வமாகையால், அவர்களிடத்து தெய்வத்தன்மையையுணரார்,தெய்வத்தையுமுணரார். அப்படியெனின் ? "தாயன்பு" அறியாக்குழந்தை பேரன்பை யறிவதெப்படி ? தாயன்பு ஸ்வபாவமாய்த் தாய்பாலுண்டு. கலிதோஷம் முதிர்ந்த இக்காலத்தில் காமநோயால் ஹிருதயம் சுருங்கிக்கருகி, ஸ்வபாவமாயுள்ள தாயன்பும் தாய்பாலில்லாத துர்க்குணரை உலகின்கண் பார்த்திருக்கலாம். அவர்களைப்பற்றி நமக்கு இங்கு விசாரமில்லை. ஏனெனில் அவர் மிருகங்களிலும் கடையாவார். பூர்வ புண்யவாசனையால் எடுத்த இந்த மானுட ஜன்மம் கழியவும் எரிநரகிற்புகுந்து கல்லாய்க் கட்டையாய் ஜனிக்கும் தன்மை வாய்ந்தவரைப்பற்றி நமக்கேன்விசாரம்! அப்படியே தகப்பனைப்போல் குழந்தைக்கு சிக்ஷைசெய்யும் தீக்ஷாகுரு வேறுமில்லை. "அடிக்குமொருகை அணைக்குமொருகை" யென்று சொன்னது தந்தை தாய் இருவரையும் தெய்வத்தின் இருகைகளாக உருவகப்படுத்திச் சொன்னதாகக் கொள்ளல்வேண்டும். தாய்தந்தையருக்குப் பின் வித்தியா குரு வழிபடத்தக்கவர். வித்தியாதீக்ஷை முடிந்தபின், அரசன் குருவாம். அப்படியெனில் அரசன் 'அரசியல்' என்று சொல்லும் இராஜாங்கதர்மத்தைக் காத்து வளர்க்க ஏற்பட்டவனாதலால், அவன் வழிப்பட்டு, அதாவது அரசியல் தர்மத்துக்குக் கட்டுப்

பட்டு நடக்கப்பழகவேண்டும். "இல்லறமல்லது நல்லறமல்ல" என்று சொன்னதுண்மையாதலாலும், அரசியல் தாமம் சீரியாக நடவாதவிடத்து, இல்லறமும் சரியாக நடவாது பழுதுபட்டுப்போமாதலாலும், "அரசன் குரு" வென்றது உண்மையே. அரசன் குருவானால், அவனுக்கு சிஷன்யார்? அவன்தான் இல்லற ஞானியாம் கிரஹஸ்தன். இவனை "Citizen" என்று சொல்வர் மேற்றிசையோர். இல்லாள்வானுக்கு அவன் வீடு எப்படிவாஸமோ, அப்படி "ஸிடிஸன்" என்னும் மஹாகுடும்பிக்கு, முதலில் அவன் வஸிக்கும் நகரும், பின்னர் மாகாணமும், பின்னர் இராஜ்ஜியமும், பின்னர் தேசமுழுமையும், வாசஸ்தானமாம். இவனே "குடி" யென்னும் சப்தத்துக்கு இலக்ஷியமானவன். அரசன் தலை, குடி தேஹம். எண்சாணுடம்புக்கும் சிரஸே பிரதானமாவதுபோல், அஷ்டமூர்த்தமாய் விளங்கும் அரசியல் தர்மத்துக்கு அரசன் பிரதான புருஷனும். அரசன் என்றது அரசியலறிந்தொழுகுவானுக்கேபொருந்துமல்லது அது பிறழ்ந்து நடப்பானுக்குப் பொருந்தாது. "குடியுயரக்கோனுயரும்" என்றபடி, குடியின் யோகக்ஷேமத்தை விர்த்தி செய்வதன்றி அவனுக்கு வேறு விர்த்தியில்லை. அதுவே யவனுக்கு விர்த்தி. அப்படியே "குடிதாழக்கோன்தாழ்வான்" என்பதும் உண்மையே. ஆகையால் கொடுங்கோலால் குடிகளைச் சின்னாபின்னப்படுத்துவான் "அரசன்" என்கிற சப்தத்திற்கு இலக்ஷியார்த்தமாகமாட்டான். இது விளங்கவே "கொடுங்கோல் மன்னர் வாழுநாட்டிற் கடும்புலி வாழுங்காடு நன்றே" என்றார் பெரியோர்.

அரசனுக்குப் பிறகு ஆத்மஞானம் புகட்டும் ஸத்குரு பூஜிக்கப்படத் தக்கவர். எனின், அரசனை வழிபட்டு அரசியல் தர்மமுற்றும் அறிந்தொழுகப் பழகிய பின், ஸத்குருவைத்தேடி ஆத்மஞானம் பெற முயற்சிக்கவேண்டியது என்பதுகருத்தாம். அரசுக்கும் குடிக்குமுள்ள அபேதமறிந்தாலன்றி ஜகத்ஜீவ அபேதம் விளங்கப்போதித்தல் கூடாமையாம். குழந்தைப்பருவத்தில் தாய்க்கும் பிள்ளைக்குமுள்ள அபேதம் எப்படி தாயன்பாலுண்டாகி விளங்குகிறதோ, அப்படியே பாலப்பருவத்தில் தகப்பனுக்கும் பிள்ளைக்குமுள்ள அபேதம், தகப்பனது சிக்ஷாபோதனையால் விளங்குகிறது. அதுவும் அன்பின் காரியமேயாதலால், அபேத வுணர்ச்சியுள்ளவிடத்திலெல்லாம் உள்ளன்புமுண்டு என்பது சொல்லாமலே யமையும். உள்ளன்பில்லாதவிடத்து அபேதபாவம் ஒருக்காலும் ஜனிக்காது. சிக்ஷைசெய்யும் தகப்பனிடத்துப் பிள்ளைக்கு உண்டாகும் அபேதபாவம் கண்டனை தண்டனையாலுண்டாவதல்ல; உள்ளன்பு காரணமாகத் தன்னைத்திருத்தி முன்னுக்குக் கொண்டுவரவேண்டுமென்கிற அந்தர்நோக்குக்குச் சாதனமானது சிக்ஷையென்று, உள்ளன்பு காரணமாகச் சிறுவன் உணரும் உணர்ச்சியே அபேதபாவத்தையுண்டுபண்ணுகிறது. ஆகையால், "அபேததரிசனம் ஞானம்" என்னும் சுருதிவாக்கு எல்லா அவஸ்தைகளிலு முண்மையே. உள்ளன்பில்லாவிடத்து "அபேததரிசனம்" உண்டாகமாட்டாது. "அபேததரிசனம்" இல்லாதவிடத்து அறிவும் உண்டாகமாட்டாது. இப்படியேவித்தியாகுருவுக்கும் வித்வத்சிஷனுக்குமுள்ள சம்பந்தம், ஆசானுக்கும் மாணாக்கனுக்குமுள்ள பரஸ்பர அன்பினால் விர்த்தியாகி உள்ளன்பு காரணமாய் அபேததரிசனம் லபிக்கப்பலனைத்தரும்.

"அரசன்-குடி" யென்கிற முறையிலும் இப்படியே. அரசனுக்கும் குடிக்கும் சற்றேனும் பேதம் கற்பிப்போர் அரசியல் விரோதிகளாவார். "அரசன் குடி" என்கிற குரு-சிஷ்யபாவ சம்பந்தத்தால், அரசியல் தர்மத்தை யறிந்தொழுகி அதை அதிக்கிரமித்து, அதற்கும் மேலான தர்மத்தை யுண

ரப்பாத்திரனாகிறான். அரசனாயிருப்பதில் எவ்வளவு பெருமையோ, அவ்வளவு பெருமை குடியினிடத்துமுள்ளது. அரசன் பெருமைக்கு குடியின் பெருமையே ஆதார பூதமாயிருப்பதால் அதனிலும் பெரிதென்றும் சொல்லலாம். ஆனால் உண்மையாகப் பார்க்கில், அரசன்-குடியிருவருக்கும் அபேதபாவமே சித்திப்பதால் மேல்-கீழ் என்கிற பேதத்திற்கு இடமில்லை. "Citizenship"—"குடித்துவம்," அதாவது குடியாயிருக்குந்தன்மை, "கிரஹஸ்தாச்சிரமம்" என்னும் ஆசிரம தர்மத்திலடங்குமாம். வித்தியாதீக்ஷகாலம் எப்படி பிரம்மசரியாச்ரம தர்மத்தில் அடங்குமோ, அப்படியே அரசியல் தர்மானுஷ்டான தீக்ஷையாம் "குடித்துவம்" கிரஹஸ்தாச்ரம தர்மத்தில் அடங்கும். வானப்பிரஸ்தாச்ரமதர்மத்தில், பிரகிருதிதர்மத்தையறிந்தொழுகுதலாம் பிராகிருத தீக்ஷையடங்கும்.

பிரகிருதி தர்மத்தையுணர்ந்து பிராகிருத தீக்ஷைபெற்றவனே, அதையும் விட்டு அதற்குமேலாம் ஆத்மதர்மத்தை யுணரவேண்டி இயற்கையாகவே அஹத்துறவு என்னும் ஸந்யாஸம் பூண்டு ஸந்யாஸ தர்மத்தை யனுஷ்டிக்கிறான். அதாவது எதிலும் பற்றற்றவனாய், எல்லாவற்றினுமுள்ள ஆத்மாவை தரிசனம்செய்துகொண்டு, "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்னும் சுருதி வாக்கியத்தின் உண்மையை ஸ்வானுபவத்தாலறிகிறான். இப்படிப்பட்டவன் முதல் முதல் ஆத்மதரிசனம் கண்டது தன் குருவிடத்திலாதலால், தன்னிடத்திலிருந்தும் தனது பரிபக்குவக் குறைவால் தனக்கு விளங்காத ஆத்மாவை தன் குருவருளால் குருவினிடத்தில் முதல் முதல் விளங்கக்காண்கிறபடியால், அந்த குருமூர்த்தத்தை அவன் "அருட்குழவி" யானபின் தனக்கு "முன்னறிதெய்வ"மாம் தாயாகக் கொண்டாடுகிறான். அப்படிக்கொண்டாடுவதால், "காணாமற் கலப்பால் குடிக்கும் குழந்தை" யென்பதுபோல், அந்த குருமூர்த்தத்தினுடைய அருட்பிரவாக வெள்ளத்தில், அருட்கண்பெற்று, சாந்தோபசாந்தனாகிறான். இங்கே சற்சீஷனுக்குண்டாகும் ஆனந்தானுபவக்காட்சியை, ஆனந்தத் தாய்மொழியின் "5-வது, மத்தியமப்பருவம்—சித்திப்படலத்தில்" நன்றாகச் சொல்லியிருக்கிறது.

"ஆனந்தத்தாபாரோடைக்கியமேயானபின்பு
நான் கண்ட கண்ட காட்சியென்ன!
கனவுகன வழிந்ததென்ன!
என் ஆனந்தத்தாயாரே எனக்குப் பெரியவள்காண்.
தாய்பிள்ளையென்றுசொல்லுந்தடையுமறுத்துவிட்
[டேன்;
அவளேதான் நானேயுவள் அப்புறந்தான் வழக்கேது?
வழக்கில்லையானாலும் வழிதேடவேணும்நான்."

இந்த அவஸ்தையிலே, ஸத்குரு தேஹமாயின்றி தேஹியாய் விளங்குகிறாரென்கிற சற்போதம் பலித்துத் தனக்கு ஆதிவாசனையாயுண்டான "தேஹோஹம்" என்கிற அனாதிவாசனை நழுவிப்போக, குருசிஷ்யன் என்கிற பேதபாவமும் அஃதோடு நழுவிவிடுகிறது. இந்த அவசரத்தில் குருவின் அருட்பிரவாகத்தில் மூழ்கிய உத்தம சீஷன் குருசிஷ்ய பாவத்தையுங்கடந்து ஆத்மா ஏகமாய் இரண்டற்றதா யிருக்கிறதென்பதை அருள்வெளியில் குரு அனுக்ரகித்த அருட்கண்ணாற் பார்க்கிறான். பார்த்ததோர் பார்வையும் பார்வைமாத்திரமாக நிற்க, அவன்சொல்வதைக்கேண்மின்:—

"அவளாரோ நானாரோ அவளுமில்லை நானுமில்லை;
அப்படியிருக்க ஆசையென்ன என்கிறையோ?
அன்பேயவளாகி அன்புருவா யவதரித்தாள்:
அன்புருவா யவதரித்தாள் அவளருங்கருணை மிகுதி
[யினால்.
கருணை மிகுதியினால் கடைந்திட்டபாலமுதம்
உண்கெளிப்பதுநா னுண்மையே யானாலும்
உண்மையதுவல்ல உள்ளதுவுமதுவல்ல.
உள்ளதையுள்ளபடி உள்ளாய்ந்து பார்த்தாக்கால்,
இன்னுமிருக்குதுபார் எனக்குவழிதேட;

வழிதேடி யலையாமல் வழிகாட்டியழைத்ததினால்,
காட்டிய வழியதனைக் கனவு நனவழிந்து
பக்தியுட னாராய்ந்து புத்தியினா லறிந்துகொண்
டேன்."

உண்மையறியும்வழி யிதுவாம். ஆகையால் இவ்வழிநிற்போரே இங்கே சொல்வதை முற்றும் அறிந்தொழுகவல்லவராவர். மற்றவர்கள் பக்தி சிரத்தையோடு வாசித்து, வாசித்ததை மனதில் வைத்து, குருவருளைச் சிந்தித்து மனனஞ்செய்தால், மனம் சுத்தியடைந்து பரிபக்குவமெய்தியகாலத்து குருப்பிரஸாதத்தால் உண்மையை உள்ளபடி முற்றுமறிந்தொழுக வல்லவராவர்.

"அந்தக்கரணவாசனை" யென்பதைப்பற்றிய விசாரத்தைத் தொடுக்குமுன், அந்தக்கரணம் என்றால் என்ன? என்று சற்றுவிசாரிப்போம். அதன் வாச்சியார்த்தம் (அந்த:= உள்ளே) உள்ளேயிருக்கப்பட்ட 'கரணம்' அல்லது பொறி, அல்லது அறிகருவி, என்பதாம். அறியும் சக்தி அறிவுக்கன்றி வேறொன்றுக்குமில்லையென்பது ஸ்பஷ்டம். அப்படியிருக்க 'அறிகருவி' யென்றால், என்ன? "அறியும் அறிவுக்குக் கருவியாக வுதவும் ஒன்று" என்பது அதன் உண்மைப்பொருளாம். அறியும் அறிவுக்கு ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்கள் என்று சொல்லும் புறக்கருவிகள் பத்திருப்பதால், அவையன்றி அவைக்கெல்லாம் காரணமாகி அவையெல்லாவற்றின் சக்தியும் தன்னில் அமையப்பெற்றதாய் உள்ளே (அதாவது உள்முகத்தில் அல்லது அந்தர்முகத்தில்) அறியத்தக்க கருவியாய் விளங்கும் ஒன்றைக்குறிக்க "அந்தக்கரணம்" என்று பெயரிட்டதாம். இது "இந்திரியங்களுக்கெல்லாம் ராஜா" என்று வராகோபநிஷத்தில் சொல்லியிருக்கும் மனசேயாம். இந்த தசேந்திரியங்களையும் இவைக்கு ராஜாவாகிய மனசையும், சமஷ்டிபாவத்தில் (அண்டக்கூறுபாட்டில்) ஏகாதசருத்ரரென்று புராணத்தில்வல்லோர் சொல்லுவார்கள்.

"ருத்திரன்" என்கிற பேர் இடுகுறியாகவின்றி காரணப்பேராக வந்ததாயிருக்கிறது. அது ரோதனம், திராவணம் என்று இரண்டு சமஸ்கிருத பதங்களின் அருத்தத்தைச் சேர்த்துணர்த்தும் ஒரு பதமாகவிருக்கிறது. 'ரோதனம்' என்றால் அழுகை; 'திராவணம்' என்றால் ஓடுதல். பிரம்மா தாமச சிருஷ்டி செய்ய யத்தனித்தகாலையில், ராஜஸஸ்வரூபியாகிய அவருடைய அம்சமும், அவருக்குண்டானதோர் "பொறுக்கக்கூடாத கோபம் காரணமாயுண்டானதால், அந்த தாமஸஅம்சமும் சேர்ந்து கறுப்புஞ் சிவப்பும் கலந்த சிருஷ்டியுண்டானதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. "நீலலோகிதனான கறுப்புஞ் சிவப்புங் கலந்திருக்கிற குமாரனொருவன் உதித்து இனிமையான குரலுடன் அழுதுகொண்டோடினான். பிதாமகன் அவனைநோக்கி" 'குமாரனே! ஏன் ரோதனம்பண்ணுகிறாய்?' என்ன, அவன் 'எனக்கு நாமதேயங் கொடும்' என்று பிரதியுத்திரஞ் சொன்னான். அதைக்கேட்டுப் பிரம்மா, 'தேவனே! ருத்திரன் என்கிற நாமதேயத்தினால் பிரசித்தமாகக்கடவை; ரோதனஞ்செய்யாதே, தைரியமாயிரு' என்றுசொன்னான். இப்படிச்சொல்லியும் அந்தக்குமாரன் மீண்டும் ஏழுதரம் ரோதனம் பண்ணினான். அதனாலே பிரபுவாகிய அந்தக் கமலாசனன் அவனுக்குப் பின்னும் ஏழு காரணப்பேர்களைக் கொடுத்து, அஷ்டமூர்த்தமான அந்த ருத்திரமூர்த்திகளுக்கு வேறுவேறு ஸ்தானங்களையும், பத்தினிகளையும், புத்திரர்களையும் கொடுத்தான்"—என்று விஷ்ணுபுராணம் கூறுகின்றது. இந்த எட்டு மூர்த்தங்களையும் பற்றி "நாம-ரூபம்" என்கிற தலைப்பின் கீழ் பிரத்தியேகமாகப் பேசும்பொழுது விவரித்துரைக்க நேரிடுமாதலால், இங்கே வளர்த்தாதுவிட்டோம்.

இப்படி அஷ்டமூர்த்தமான ருத்திரனே, முதலில் 11-பாகமாகத் தன்னைப் பிரித்துக் கொண்டாரென்பது இங்கே சொல்லத்தக்கது. நீலலோகிதனை இந்த ருத்திர மூர்த்தியின் ஜனன வரலாற்றில், "மூன்று லோகங்களும் எரிந்துபோம்படியான கோபாக்கினிச் சுவாலைகள் பொருந்தியும், பயங்கரமாகப் புருவங்களை நெறித்துக்கொண்டும், குரோதத்தினாலே ஜ்வலித்துக்கொண்டுமிருக்கிற பிரம்மாவின் லலாடத்திலிருந்து, மத்தியான்ன மார்த்தாண்டமண்டலம் போலே பிரகாசமுடையவரும், அர்த்த நாரிரூபத்தைத் தரித்தவருமான ருத்திரமூர்த்தி ஜனித்தார்." என்று சொல்லியிருக்கிறது.

பின்னும் இந்த ருத்ரசிருஷ்டியின் வரலாற்றைப் புராணவாயிலாக விசாரிக்கின்,—"இப்படி அத்தியுன்னத சரீரமுடையவராயும், உக்கிரகுணமுள்ளவராயும், பாதியுடம்பு ஆணும் பாதியுடம்புபெண்ணுமாயும், பிறந்த ருத்திரமூர்த்தியைப் பார்த்துச் சதுர்முகன், 'இரண்டுவிதமாயிருக்கிற வுன்னைப் பிரத்தியேகமாகப் பிரி' என்று சொல்லி, அந்தர்த்தானமானான்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்பால் அந்த ருத்திரமூர்த்தியும், பரமேஷ்டியின் ஆக்கினைப்படி, ஸ்திரீ புருஷரூபமான தம்முடம்பை ஸ்திரீ ரூபமும் புருஷரூபமுமாகத் தனியே பிர்த்து வேறாக ஏற்படுத்தி அந்தப் புருஷரூபத்தையும் பதினொருவிதமாகப் பிரித்து, ஸ்திரீ சொரூபத்தையும் வெகு விதங்களாகப் பிரித்தார். அவைகள் சவுமியங்களும், பயங்கரங்களும், சாந்தங்களும், கோரங்களும், கறுத்தவைகளும், வெளுத்தவைகளுமாகப் பலவகைப்பட்டிருந்தன.—என்பது சிருஷ்டிக்கிரமத்தின் பௌராணிக வர்ணனை.

இங்கே அர்த்தநாரிரூபத்தைத் தரித்த நீலலோகிதனை ருத்திரமூர்த்தி தன்னை ஆண் வேறு பெண் வேறாகப் பிரித்துக்கொண்டதெதுவோ அது பொறி-புலன் என்று சொல்லத்தக்கது. தனு-கரண-புவன-போகம் என்கிற நான்கில், தேஹம் (தனு:) என்பது சிருஷ்டி காரணனும் சங்கல்ப ரூபியுமான சதுர்முகப்பிரம்மா. கரணம் என்பது அவனிடத்திருந்துண்டான ராஜஸ-தாமஸ விருத்திகளான தசேந்திரியங்களும் அதற்கு ராஜாவான தேஜோரூப மனசும். இதுதான் ருத்திரன் தனது புருஷ ரூபத்தைப் பதினொரு விதமாகப் பிரித்து வேறாக ஏற்படுத்தின வியஷ்டி சிருஷ்டி. புவனம் என்பது ஸ்திரீ சொரூபத்தை வெகு விதங்களாகப் பிரித்து போகத்துக்குரிய வஸ்துக்களாக ஏற்படுத்தினதாம். கரணம்—புவனம் இவற்றின் சேர்க்கையாம் ஐக்கியபாவமே போகம். இவைக்கெல்லாமிருப்பிடமாயும் யாகசாலையாயுமிருப்பது தேஹம் (தனு).

இப்பொழுது அந்தக்கரண மென்பது "இந்திரியங்களுக்கு ராஜாவான மனசு" என்று சொன்னால் இதை வாசிப்போர் அறிந்துகொள்வார்களென்று நம்புகிறோம். தத்துவார்த்தமாய் விளக்கினால் தத்துவ ஞானமில்லாத ஜனங்களுக்கு விளங்குவது கஷ்டமாயிருக்குமென்று பௌராணீகமாக வெடுத்துச் சொன்னோம். அஹம்தத்துவனை அஹங்கார புருஷனே பிரம்மா. "தத்துவமெங்குண்டு தத்துவனங்குண்டு" என்பது திருமந்திரோபதேசம். தத்துவத்தைத் தத்துவனிலிருந்துபிரித்துச் சொல்வது புத்திமாத்திரத்தாலன்றி, உண்மையாக அப்படி பிரிப்பது சாத்தியமில்லை. விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டும்விடாத இலக்கணை என்னும் இலக்கணைவிசேஷங்களால் ஒன்றைவிட்டொன்றைப் பற்றுவதும், ஒன்றிருக்க ஒன்றைப்பற்றுவதும், ஒன்றைவிட்டும்விடாது பற்றுவதும் மனதிற்கியல்பாம். ஏனெனில் அது சங்கல்ப விகற்ப ரூபமாயுள்ளது. பிடிப்பதும் விடுவதுமே தொழிலாயுள்ள மனதுக்கு இந்த பேதபாவங்கள் இயல்பாயமையும். சங்கல்ப விகற்ப ரூபமான இந்த ஆதிமன

சே பிரம்மாவின் தாமசசிருஷ்டியென்று சொல்லிய ருத்திரனுற்பத்தி. அது எப்போதும் நாமதேயங்களை நாடி பழுதுகொண்டோடிக் கொண்டிருக்கும். அதன் அழுகையை நிறுத்தவும், ஓட்டத்தைக் கட்டவும் மனுஷனால் சாத்தியமில்லை; தேவர்களாலும் அது சாத்தியமல்ல. அதை யழவிட்டே திர்ப்திசெய்ய வேண்டும். ஓடவிட்டே பிடிக்க வேண்டும்.

"அஞ்சுமடக்கடக்கென் பரறிவிலார்
அஞ்சுமடக் குமமரரு மங்கில்லை
அஞ்சுமடக்கில சேதனமா மென்றிட்டு
அஞ்சுமடக்கா அறிவறிந்தேனே."

என்பது திருமந்திரோபதேசம்.

சங்கல்ப விகற்பமான இந்த ஆதிமனசுக்கு எதையும் பற்றவும், விடவும், பற்றிவிடவும், விட்டுப்பிடிக்கவும், விட்டும் விடாதுபற்றவும் விடாது விட்டு நிற்கவும் சக்தியுண்டு. இந்த சக்தி அதன் காரணமான ராஜச தாமசகுணங்களினாலே அதற்கியல்பா யமைந்துளது. இப்படி யெல்லாவற்றையும் பற்றிவிடும் மனசை விடாதுபற்றி நிற்பதொன்றுண்டு. அது எதுவோ அதுவே ஆதி யென்றசொல்லும் அந்தக்கரணவாசனை. அந்தவாசனை தான் ருத்திரன் பிறந்ததும் அவனைரோதனம் செய்து கொண்டு ஓடும்படிசெய்தது. இந்த வாசனை பெருகும், மெலியும்: ஆனால் இது மனசுள்ள வரையில் அதைப்பற்றுது விடுவதில்லை; மணத்துக்குப் பூ இடமாயிருப்பதுபோல, அந்த வாசனைக்கு இம்மனசு பெட்டகமாம் இருப்பிடமாக விருக்கிறது. இந்த வாசனை மனசு உதிக்கும்பொழுதே அஃதோடுகூடவே உதித்து, அஃதுலயிக்கும்பொழுது தானும் காரணத்தில் லயித்திருந்து, பின்னும் அது உதிக்கும்பொழுது தானும் கூடவேஉதித்து அதை அழுதுக்கொண்டு ஓடச்செய்யும். இது ஸதா நாமதேயத்தைத் தேடிக்கொண்டே யிருக்கும். 'நாமதேயம்'="பேர், ஊர்"இல்லாவிட்டால் இது பொறுக்காது. ஆண்பெண் ரூபமான போகபோக்கிய மிரண்டும் தனக்குள்ளிருந்தும் அஃதையறியாது தன்னைத்தானே பதினொருவிதமாகப்பகுத்துக்கொண்டுபோக்கியப்பொருளாம் ஸ்திரீசொரூபத்தையும் வெவ்வேருகப்பிரித்துப் பலபலவாகத் துய்த்து சுகதுக்கங்களை யனுபவிக்கும். இதற்கு, தன்னைப்பற்றிய அவித்தியாவாசனையினால் தன்னறிவிழந்திருப்பதால், எதையும் நீடித்தனுபவிக்கும் சக்தியில்லை. கோழிகூடுவதுபோல் நிமிஷமாத்திரையில் அனுபவித்தலுக்கும். ஆகையால், இது நுகர்வதெல்லாம் சிற்றின்பம் எனப் பேர்பெறலாயிற்று. செய்சங்கற்பமொவ்வொன்றும் சிதாகாசத்தில் பதிவுபட்டு நிற்குந் தன்மையதாகும். நிலத்தில் விழுந்த வித்துப்போல் அது சிதாகாசத்தினின்றும் முளைத்தெழுந்துபலனைக்கொடுக்கும். விகற்பமும் அப்படியே. இந்தச்சங்கற்ப விகற்பக் கூட்டங்களே பிறப்பிறப்புக்குக் காரணமாம். "பிறப்பு மிறப்பும் நினைப்புமறப்புமாம்" என்றார் எம்பெருமான் மாணிக்கவாசகரும். ஆதலால் "ஆதி"யாம் அந்தக்கரணவாசனை யென்பது, பெருங்காயம் வைத்த செப்பில் பெருங்காயம் போயும் அதன் வாசனை நிற்பதுபோல், சங்கற்ப விகற்பரூபமான மனசு செய்யும் கர்மம் அழிந்தும் அதன் வித்து (ஸம்ஸ்காரம்) வாஸனு மாத்திரமாக அந்த மனசின் கண்ணிருந்து அதன் உட்பொறியாம் அந்தக்கரணத்தைப்பற்றி நின்று, முன்செய் கர்மத்துக்கிசைய அதை மேன்மேலும்அக்கர்மவழியில் செலுத்துவதெதுவோ, அதுவேயாம். இந்த அந்தக்கரணவாசனையினாலேயே கர்மம் நசிக்காமல் பிறவிக்குப் பிறவிபற்றிநின்று வளர்கிறது. மனிதன் திரிகரண பூர்வமாய் நினைக்கும் ஒவ்வொரு நினைவும் கல்லிலெழுத்துப்போல் அழியாது வாசனுரூபமாய் மனகாசத்தில் தங்கி நிற்கிறது. இப்படி காதத்துக்குள்ளிருக்கும்கால சக்ரத்திலுழலும் அதற்கு ஆரங்களாகஅமைந்துள்ள "கர்மஸம்ஸ்காரங்கள்" எவையுண்

டோ அவைதான் "அந்தக்கரணவாசனை" யென்று சொல்லப்படும் ஆதியின் சொரூபமாம். இது நாமரூபத்தோடு கூடியது. அதாவது நாதபிந்துரூபமானது: காலதேசத்துக்குட்பட்டது: ஆகையால் 'நாமதேயம்' என்னும் பேரால் வழங்குவது. அந்தக்கரணவாஸனையற்றால் நாமதேயம் இல்லை. நாமதேயமில்லாவிட்டால் அந்தக்கரணவாஸனையும் நாமதேயத்துக்கமுழுதும் வீங்கி க்ஷீணித்துப்போம். ஆகையால் அந்தக்கரணவாஸனை நசிக்கப்பெற்ற மஹான்களுக்கு நாமதேயமில்லை. வாசனைக்ஷயத்தின்பொருட்டு ஸந்யாஸம் பூண்ட யதிகளும் நாமதேயத்தைவிட்டு விடுவதும், அந்தக்கரணவாசனையைப் போஷிக்காதுவிட்டு க்ஷீணிக்கச்செய்து கடைசியில் ஞானதீபத்தால் அதைநசிக்கச் செய்துவிடலாமென்றே. ஆகையால் ஆதிக்குமூலம், பூர்வஜன்மத்தில் செய்த புண்யபாபமான கர்மங்களேயென்று ஏற்படுகிறது. ஆதிமூலம் இப்படி கர்மம் என்று விளங்க, அந்தக் கர்மத்துக்குமூலம் என்னவென்று விசாரிக்கில், அது கர்மத்துக்கு ஆஸ்பதமான "மனசைப் பற்றின வாசனை" யென்று நாம் சொன்னதெதுவோ அதுவேயென்று அந்தர்முகவிசாரணையில் ஸ்பஷ்டமாக ஏற்படும். மனதைப் பற்றியவாசனை எதுவோ அதற்கு "அவித்தை" யென்று பேர். "மாயை" யென்றும் ஒரு பேருண்டு; ஆனால் சமஷ்டிவியஷ்டி பாவபேதமன்றி வேறு பேதமில்லை.

"மனமாயைமாயையிம் மாயைமயக்க
மனமாயை தான்மாயு மற்றொன்றுமில்லை
பினமாய்வதில்லை பிதற்றவும் வேண்டாந்
தனையாய்ந்திருப்பது தத்துவந்தானே."

என்பது திருமந்திரோபதேசம்.

---

## THE AGRICULTURAL COLLEGE AT COIMBATORE.

### கோயமுத்தூர் வியவசாய கலாசாலை.

வியவசாய இலாக்காத்தலைவரான மிஸ்டர் எம். இ. கூச்மான் அவர்கள் கோயமுத்தூரில் புதிதாய் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் வியவசாய கலாசாலையைப்பற்றிப் பின்வருமாறு தெரிவிக்கிறார்:—

கோயமுத்தூர் வியவசாய கலாசாலை, ஜூன்மாசத்தில் திறக்கப்பட்டது. சைதாப்பேட்டையில் வியவசாயகலாசாலையிருந்தபோது மாணுக்கர்களுக்கு சகாய சம்பளம் கொடுத்து வந்ததுபோல் இங்கே ஒன்றும் கொடுக்கப்படுகிறதில்லை. ஆனால் கலாசாலையில்படிக்க சம்பளமில்லை: விடுதிகட்டிக் கொடுத்திருப்பதற்கு குடிக்கூலியுமில்லை. சாப்பாட்டுச் செலவைமட்டும் மாணுக்கர்கள் தாங்களே பார்த்துக்கொள்ளவேண்டும். அக்கலாசாலையில் சேர்ந்து படிக்கவேண்டுமென்று அனேகர் விண்ணப்பம்செய்துகொண்டார்கள்; ஆனால் கலாசாலைத் தலைவர் அவர்களில் 22-பேர்களை மட்டும் தான் தெரிந்தெடுத்துக்கொள்ளக்கூடியதாயிருந்தது. அவர்களில் 14-பேர்கள் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேறியிருக்கிறார்கள். மற்றவர்கள் கவர்ன்மெண்டார் அனுமதியின்பேரில் அப்பரீக்ஷை தேறாமல்தானே சேர்த்துக்கொள்ளப் பட்டிருக்கிறார்கள். மாணுக்கர்களைத்தெரிந்தெடுத்ததில் காலேஜ் தலைவர் ரயத்துகள் அல்லது பெரிய நிலஸ்வான்களுடைய பிள்ளைகளாக இருப்பவர்களைப்பார்த்துப் பொறுக்கியெடுத்திருக்கிறார். ஏனென்றால், அங்கே படித்துத் தேறினவர்கள் அப்படிப்பை அவர்கள் சொந்த நிலத்தைச் சீர்திருத்தி விர்த்திக்குக் கொண்டுவருவதில் உபயோகிக்கத் தக்கவர்களாக விருக்க வேண்டுமென்பது கவர்ன்மெண்டாருடைய கருத்து. ரயத்து அல்லது குடியானவன் செய்யும், உழுதல், விதைவிதைத்தல் முத

லான குடியானவன் செய்யவேண்டிய நித்தியப்படி வேலைகளையெல்லாம் ஒவ்வொரு மாணுக்கரும் தாமே நேரில்செய்துபழகவேண்டியிருக்கும். இதனால் இவர்கள் பின்னால் தங்களுடைய சொந்தக் குடியானவர்களுக்கு வியவசாய விருத்தி வகையைப் போதிக்கக் கூடியவர்களாயிருப்பார்கள். இதற்காக நல்ல திடகாத்திரமானவர்களே மாணுக்கர்களாகச் சேர்த்துக்கொள்ளப்படுகிறார்கள், மாணுக்கர்கள் வசிப்பதற்காக 10 கட்டடங்கள் தனியாக, 6 பேர்களுக்கு ஒரு கட்டடமாகக் கட்டப்பட ஸாங்கிஷனாயிருக்கிறது. ஆதலால் எல்லா ஜாதி மாணுக்கர்களுக்கும் தகுந்த விடுதிகிடைக்கும்.



## A METRICAL TRANSLATION OF THE BHAGAVAT GITA.

### பகவத்கீதை வெண்பா.

இஃது திரிசிரபுரம் ஜில்லாவைச் சார்ந்த திருநயம் ஸா: முத்து ஐயரால் இயற்றப்பட்டதோர் அருமையான கிரந்தம். இதன் அருமை பெருமையைக் கொண்டாடக் காரணம் இதற்கு முதனூலாயுள்ள பகவத்கீதையின் சிறப்பேயாம். சென்ற எப்பிரல் மாசம் சென்னை திருமயிலையிலுள்ள ரானடே ஹாலில் "எம்மதமும் சம்மதமே" யென்றோதிய என் தாயின் உட்கருத்தையும் உபதேசத்தையும் உண்மை லக்ஷியமாகக் கொண்டு எல்லாமதங்களிலு முள்ள உண்மையின் ஏகத்வம்பற்றி மதத்தின் ஒருமையையும் அவ்வுண்மையை யனுசரித்து அதை யறிந்துய்வதற்கான வழிகள் பற்பல வென்பது பற்றி அவ்வழிகளைக் காட்டும் சமயங்களின் வேறுபாட்டையும் பற்றி ஸ்ரீ ஆதிகேசவஸ்வாமி சபையார் வேண்டுகோளின்பேரில் ஒரு பிரபந்தமெழுதி வாசிக்க நேரிட்ட காலத்தில் அக்கிராசனத்தை வகித்திருந்த பிரஹ்ம ஸ்ரீ தி. ஆர். இராமச்சந்திரய்யர் பி. ஏ. பி. எல். அவர்கள் பகவத்கீதை சாமான்னிய ஜனங்கள் வாசிக்கத்தக்கதல்லவென்று வற்புறுத்திக் கூறினார். அவர்சொல்லியதில் "சாமான்னிய ஜனங்கள்" என்ற பதத்திற்கு அர்த்தம் செய்து கொள்ளத் தெரியாமல் அனேகர் அவர் வாய்மொழியைக்கேட்டு மயங்கினார்கள். "கண்டதே காக்ஷி கொண்டதே கோலமென்று" "வயிற்று வளர்ப்பே பெரிய காரியம்" அதைத் தவிரவேறொன்றுமில்லையெனத் தங்கள் காலத்தைப் போக்கும் மௌட்டிய புத்தியுள்ளவர்கள் பரம ஏழையாயிருந்தாலும், பணத்திற்புரள்கிற பணக்காரனாயிருந்தாலும், கீதையில் நிறைந்துள்ள தேவாமிர்தத்தைப் புசிக்க யோக்கியதையற்றவர்களாயிருக்கிறார்கள் என்பதிற் சந்தேகமில்லை. ஆனால் ஒருவன் எவ்வளவு ஏழையாக விருந்தாலும் என்னதான் சாமான்யனாயிருந்தும் தர்மவழிப்பட்டு தர்மத்தை யனுசரித்து, "ஸத்யம்வத:தர்மம்சர" என்னும் வேதவாக்குக் கிரண்டின்றி மனச்சாக்ஷிபூர்வமாக நடந்துவருகையில் தர்மசங்கடத்தில் அகப்பட்டு தர்மத்தை யனுசரிக்கத்தெரியாது மயங்கி வியஸனமேலிட்டு, "வீங்கு துயராலே அசையா மனம் துடிப்ப" அருச்சுனனைப்போலசோகத்தாலே சோர்ந்திருப்பவன் யாராயிருப்பினும், இவனுக்கு பகவான் கிருபைசாதித்து குருமூர்த்தமாகத் தோன்றி கீதாசாரத்தை அவன் புத்திக்குத் தக்கபடி பக்திநிறைந்த அவன்மனதிலிருந்து குருசிஷ்ய ஸம்வாத ரீதியாக கீதாரஹஸியத்தை அவனுக்குப் போதிக்கிறார். "தாணுமற் கலப்பால் குடிக்கும்குழந்தையேபோல்" பரிபக்குவ மிகுந்த குழந்தைமனமுடையசிஷன் தற்போதமிழந்து சற்போதம் நிறைந்து ஒரு நிமிஷத்தில் தன்னிலைமாறினவனாகிறான். தேஹபாவமுள்ளவன் தேஹிரூபனாகி இதற்குமுன் காண்க்கொடுத்துவைக்காத அதிசயங்களை யெல்லாம் கண்டு மகிழ்கிறான். இந்த அதிசயானந்தத்தை யனுபவித்தவர்களேயன்றி மற்றவர்கள் உள்ளபடி யறிவது துர்ல

பம். ஆகையால் கீதா சாஸ்திரம், தர்மானுஷ்டானசீலனை யிருந்து தர்மசங்கடத்திலகப்பட்டு வருந்துமெல்லாருக்கும் உற்றவிடத்துதவுமோர் பற்றுக்கோடுபோல் உண்மையைப் பற்றுவதற்கோர் இன்றியமையாத சாதனமாகவிருக்கிறது. சாதனமாயிருப்பது போல் சாதக சாத்தியமும் அதனுள்ளேயேயடங்கியிருக்கிறது. தர்மசங்கடத்தினால் வியசனத்தில் மூழ்கிச் சேர்ந்துள்ளவனுக்கு சோகந் தீர்க்கும் சமய சஞ்சீவியாக உதவுவதாயிருக்கிறது. ஆகையால் கீதா சாஸ்திரத்தை இன்னார்தான் வாசிக்கலாம்வாசிக்கக்கூடாதென்று வெளித்தோற்றத்தைக் கொண்டு மட்டும்சொல்வது அசாத்தியம். குணமுள்ளவிடத்தில் மணம் நிறைந்திருக்கும். மணம் நிறைந்தவிடத்தில் பரங்கருணையாம் பனிமாரிபொழியும். சுபவாசனையும் ஸத்குரு கடாக்ஷமும் சேர்ந்தக்கால் சத்ரூபத்தேன் கசிந்து ஒழுகும். சத்ரூபத்தேனொழுகுங்கால், சித்ரூப வண்டினம்ரீங்காரம் செய்துகொண்டு தானே வந்துமொய்க்கும். தாமரை மலர்ந்தால் அதன் மணத்தையறிந்து அதிலுள்ள தேன் ரஸத்தை நாடி வெகு தூரத்திலிருந்து வண்டுகள் ரீங்காரம் செய்து கொண்டுவந்துமொய்க்கும் ஆனல் அத்தாமரைத் தடாகத்தில் தானே அத்தாமரைமலரின் கீழிருக்கும் தவளைகள் வாயால் புலம்புவதன்றி அதன் வாசனையையறிந்து அதினுள்ள தேனைப்பருகமாட்டா. அதுபோல, ஸாத்வீகர்கள், உலகத்தில் என்னிலையிலிருந்தாலும் தாமரையைத் தேடிவரும் வண்டுகளைப்போல, கீதாஸாரத்தைத் தேடியுண்ண வருவார்கள். ஸத்வ குணம் முதிராத அதமர்கள் கீதையை எத்தனைதரம் படித்தாலும் அதன் ரஸத்தைப்பருக அனருகராயிருப்பார்கள். கீதையின் ரஹஸ்யார்த்தம் தாமரையின் வாசனை நிறைந்த தேன்ரஸத்தைப்பருகவரும் ரீங்காரத்துவனியில் ஈடுபட்டுள்ள வண்டுகளைப்போல் மனவொழுக்கமமைந்தவர்களுக்கே பருகக்கிடைப்பதாயிருக்கும். ஆதலால் அதை இன்னார் வாசிக்கலாம், இன்னார் வாசிக்கக்கூடாதென்று சொல்வது கூடாது. தாமரையின் கீழ்த் தவளைபோல் அதன் வார்த்தைகளை மட்டும் கூடார்த்தம் தெரியாமல் சொல்லித் திரிவாருமுளர். வண்டுகளைப்போல அதன் கூடார்த்தமறிந்து அதன் ஸாரத்தையுண்டு களிப்பாருமுளர். ஆகையால்இந்த கீதா சாஸ்திரத்தைப் பண்டிதரும் பாமரரும் வாசித்தறியக்கூடியதாய் அதன் பொருள் விளங்கத் தமிழில் வெண்பா ரூபமாக வெளியிட்டது மிகவும் சிலாகிக்கத் தக்கது. இந்நூற் சிறப்பே சிறப்பு. இதைப்போல் சிறந்த நூல் வேறில்லை.

"ஆன்மவியல் தேற்றி அறிவைப் புகட்டும் நூல் [யூர்
தான்மகியில்வேறிதுபோற் சாற்றுவரோ-வான்மிசை
செங்கதிர்போல் வேறு திமிரம் துடைத்தொளியை
இங்களிப்ப துண்டோ இசை."

உலகத்திலிருளைப் போக்கச் சூரியனைப் போல் வேறு ஒளியுண்டோ? இல்லாதது போல, மனவிருளைப் போக்க கீதையைப் போல் வேறு நூல் இல்லை. சூரிய வெளிச்சம் இனியர்க்குரியது இன்னார்க்கரியது என்று ஏற்படாததுபோல், கீதையின் படனமும் இன்னார் இனியர்க்குறியதென்று பகுத்துக் கூற இயலாது. இந்த நூலின் இரகஸியார்த்தத்தை யுணருவார்க்கு விளையும் பயன் "நூற்பயனில்" நன்றாகச் சொல்லியிருக்கிறார்,—

"பண்ணூருபா நூறாயிரம்பெறுமா பாரதத்தின்
சண்ணுறுநற் கீதையெனும் கண்ணனருள்—எண்
[ணுமறை
உட்பொருளாய் ஒண்பிரம வித்தையுமாம் யோகநூல்
பெட்புறுவார்க்கில்லை பிறப்பு."

"தோதிரும் வீதித் திருநயத்தில் வாழ்கிருஷ்ண
பாரதிதன் பாலுதித்த பாவலனன்—வீரதம்ரோர்
முத்துவையன் சொற்ற முதுநூலை ஆய்வார்க்கு
நித்தனருள் நீடும் நிசம்."

இப்புஸ்தகத்தின் சிறப்பைப்பற்றி நாம் அதிகமாய்ச் சொல்லவேண்டியதில்லை. பக

வத் கீதை வினவிடையில் பொருள் விளங்க கீதாஸாரத்தைக் குழந்தைகளுமறியும் வண்ணம் எழுதிவருவது போலவே, ஒவ்வொரு சுலோகத்தின் அருத்தத்தையும் ஒரு வெண்பாவில் அடங்க இனிய தமிழில் சொற்பிழை பொருட்பிழையின்றி பக்திசிரத்தை நிறைந்த மனத்தோடு மொழிபெயர்த்துள்ளார். ஒவ்வொரு அத்தியாயத்தின் முதலிலும் அதன் கருத்து விளங்க அவ்வத்தியாயத்தின் பொருளடக்கம் கூறியிருப்பது வாசிப்போர்க்கு அந்தந்த அதிகாரத்தின் உட்பொருளை கிரகிப்பதற்கு அனுகூலமாயிருக்கும்படி அமைத்திருக்கிறார். பள்ளியிற் படிக்கும் பிள்ளைகளுக்கு பகவத் கீதை சொல்லிக் கொடுக்க வேண்டுமெனின் இந்த பகவத் கீதை வெண்பாவைப்போல் சிறந்ததும் இயைந்ததுமான புஸ்தகம் வேறில்லை. இங்கிலீஷ் படித்த ஆர்ப்பாட்டத்தில் மதப்பிரஷ்டர்களாய் ஸத்குணஹீனர்களாய்ப்போன பல்லார் நிலைமையும் கண்டு பரிதபித்து வித்தியா சாலைகளில் உள்மதபோதனையும் உள்ளபடி செய்யவேண்டுமென்று வற்புறுத்திக்கூறி வந்தபோது, இங்கிலீஷில் 'பைபிள்' இருப்பது போல், ஹிந்து மதபோதனைக்கேற்றதும் இன்றியமையாததுமான முக்கிய கிரந்தம் இல்லையென்று அப்பொழுது வித்யா இலாகாத்தலைவராயிருந்த டாக்டர் டங்கன் நம்மிடத்துக் குறைகூறியதுண்டு. உள்மதபோதனையின் அவசியம் வெள்ளிடைமலைபோல் விளங்கும் இக்காலத்தில் இப்புஸ்தகத்தை ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு பாடசாலையிலும் பிள்ளைகளுக்கு நித்தியப்பாடமாக ஏற்படுத்தி நடத்திவரவேண்டுமென நாம் வற்புறுத்துவது அனவசியமாம். இதன் விலைவிவரம் விளம்பரத்திற் கண்டுகொள்க.

## THE RELATION OF GURU-SISHYA.

### குரு சிஷ்ய சம்பந்தம்.

#### அதன் உண்மை.

1. குரு என்ற பதத்திற்கு 'இருட்டை' அஞ்ஞானத்தைப் 'போக்குகின்றவர்'—என்று அருத்தம். குருக்கள் ஐவராவர்:—

"அரசன், உபாத்தியான், தாய், தந்தை, தம்முன்
நிகரில் குரவர் இவர், இவரைத்—தேவரைப் [போல்
தொழுது எழுக என்பதே
யாவரும் கண்ட நெறி."—ஆசாரக்கோவை.

ஜனங்களை விதிநிஷேதங்களால் நல்வழிப்படுத்துகின்றமையால் அரசன் குருவாவான். "நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே" என்பது புறநானூறு. "திருவுடை மன்னரைக் காணிற்றிருமாலைக் கண்டேன்" என்று சடகோபர் வசனமும் இங்கு கவனிக்கத் தக்கது.

2. மாதா பிதா முதற் குருவாவர். அவர்களாற் பெற்றது இந்த ஸ்தூல சரீரம். இது இன்றேல், ஜீவன் மோக்ஷம் பெறுதல் இயலாது. இச்சரீரமே முக்யமானசாதனம். இதுபற்றியே "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்ற ஔவைமொழி வழங்குவது. மேலும் அவர்கள் நமக்கு ஹிதமாக உபதேசிக்கின்றவர்கள். "தந்தை தாய்ப்பேண்" என்றதின் பொருள் "தந்தை சொன் மிக்க மந்திரம் இல்லை; தாய் சொற் றுறந்தொரு வாசகம் இல்லை" என்ற வாக்கியங்களினுற் புலப்படும்.

'மந்திரம்'—என்பது ஞானமார்க்கத்தின் முறையான உபநிஷத்தையும் அதன் சாரமான திருமந்திரத்தையும், "வாசகம்" என்பது, பக்தி மார்க்கத்தின் முறையான திருவாசகத்தையும், குறிப்பிடுகின்றன. அத்தாய்தந்தையர்க்கு நாம் நனி நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம், என்பதை அறிவுறுத்துமாறு, ஔவையாரும், தந்தைதாய்ப்பே

ண், என்ற வாசகத்தின் பின் "நன்றிமறவேல்', என்ற வாசகத்தை வைத்தார் போலும். விருத்தாப்பிய காலத்தில் அவர்கள் மனம்நோகாது அவர்களைக் காப்பாற்றவும், அவர்கள் மரணத்தின் பின்னர் அவர்கள் பரலோகத்திற்குப் போகும் வழி சுகமாக இருக்கவும், அதாவது, புவர்லோகத்தில் அவர்களின் சூக்ஷ்ம சரீரங்களின் கழற்சி இலகுவாகவும் சீக்கிரமாகவும் ஏற்படவும் சுவர்க்கலோகத்தில் சுகமாக இருக்கவும் புத்திரன் சிரார்த்தாதி கர்மங்களை சிரத்தையுடனே செய்யவேண்டும்.

3. இவர்களுக்கு அடுத்தகுரு "தன்முன்" தனக்கு முன் தோன்றல், அதாவது ஜ்யேஷ்ட பிராதா என்பவராம். நம்முடைய க்ஷேமத்திலும், நன்மையிலும் நல்லெண்ணமுள்ளவர் இவரே. மஹாபாரதத்தின் கண்ணுள்ள, தர்மபுத்திரரே இதற்குத் தக்க சான்றாம்.

4. இவரைவிட உயர்வான குரு உபாத்தியாயராவர். இவர் அக்ஷராப்பியாசம் கற்பிப்பவர் முதற்கொண்டு ஞானகுரு ஈறாகப் படிப்படியா யிருக்கின்றார்.

நாம் நல்வழியில் நடைபெறும்படி கல்வி கற்றுக்கொடுத்து அதன் மூலமாய் தர்மாதர்மங்களைப் பகுத்தறியும்படி செய்விக்கின்றவர் இவ்வுபாத்தியாயரே. இவரே நம்முடைய கண்ணைத் திறக்கின்றவராவர். இது பற்றி அன்றோ சாதாரணமாய் நம்முடைய குமாரனைப் பள்ளிக்கூடத்தில் வைக்கும்போது உபாத்தியாயரை நோக்கி உபசாரமாக 'இவனுக்கு எண்ணும் எழுத்தும் கற்பித்து கண் திறந்துவிடுங்கள்' எனச்சொல்லுகின்றோம். இதில் ஒரு முக்கியமான தத்வம் தொனிக்கிறது. அதாவது 'திறத்தல்' என்றால் மறைந்து மூடியிருந்ததை வெளிப்படுத்தல் என்று பொருள்படுகிறது. "எல்லாரும் ஞானத் தெளிஞர்" என்றார் அருணகிரிநாதர் ஒவ்வொருஜீவனும் ஈஸ்வர அம்சம் உள்ளவன். இருவருக்கும் உள்ள சம்பந்தமும் வித்துக்கும் மரத்துக்கும் இருக்கும் சம்பந்தமும் ஒன்றாம். இது சாந்தோக்கிய உபநிஷத்தின் தாத்பரியமுமாம். கல்வியால் அறத்தே உள்ளது தான் வெளியில் தோன்றுவதாகும். "கண்ணகத்து அஞ்சனம் போல்" கல்வியென்றார் சிவகசிந்தாமணி நூலார். "அஞ்சனம் என்றால் சேமப் பொருளைக்காட்டும் மை".

புதைந்த பொருளை நாம் அறிந்துகொள்வதற்கு அஞ்சனமை எப்படி உதவுகின்றதோ? அதுபோல கல்வி மறைந்திருக்கின்ற அறிவை வெளிப்படுத்தச் சாதனமாம். கல்வி என்றதற்கு சொற்பொருள்-கல்லுதல், தோண்டுதல்-என்பதாம்: "வி" தொழிற்பெயர் விகுதி, தோண்டுதல், தோண்டி யெடுத்தல்; புதைந்து இருந்ததை வெளியிடல், என்று பொருள் அமையும். இக்கருத்தைக் கொண்டவராய் திருவள்ளுவநாயனாரும்,

> "தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்
> கற்றனைத்தூறும் அறிவு." [தர்க்கு

என்றார். குப்தமாக இருக்கும் நீர் ஆழமாகக் கேணியைத் தோண்டத்தோண்ட வெளிவரும். அதுபோல் கல்வியால் குப்தமாக இருக்கும் அறிவுவெளிவரும், மலரும். விகாசிக்கும். கீதையில் அடியில்வரும் அர்ச்சுனன் வசனம் இங்குபோஜிக்கத் தக்கது. "நஷ்டோமோஹ: ஸ்மிர்திலப்தா,"—"அஞ்ஞானம் போயிற்று ஸ்மரணையை அடைந்தேன்", ஞானத்தை மறைத்துக் கொண்டிருந்த மயக்கம் நீங்கவே, உள்ளபடி இருந்த ஞானம் வெளிப்பட்டது. கல்விப் பயிற்சியால் 'உள்ளது' வெளியாகும். ஏற்றத்தாழ்ச்சியாக பலபடியாக, உலகத்தாரிடம் அறிவு இருக்கின்றதே என்றால், அது அவரவர் பயற்சியின் குறைவு அதாவது சம்ஸ்காரத்தின் குறைவுதான். இச்சம்ஸ்காரங்கள் பலஜன்மங்களில் ஏற்படுவதாகும். இது பற்றியே சடகோப ஆழ்வாரும்,—

"அவரவர் விதிவழி அடைய நின்றனரே" என்றார்.

*"ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்புடைத்து."

என்ற குறள் வாக்கியமும் இங்கு கவனிக்கத் தக்கது.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும் என்ற முதுமொழியில் சாதாரணமாகவழங்கும்" பொருளைத் தவிர விசேஷ அர்த்தம் ஒன்று இருக்கிறதாகத் தெரியவருகிறது

எண்—என்றால்—எண்ணிக்கை; அதாவது—கணிதம்; உலகத்தின் எந்தப் பிரகிருதிப்பொருளைப் பார்த்தாலும் அதன் அணுக்களின் அமைப்பும், அவ்வணுக்களின் சலனமும், இத்தனை என்றும், இவ்வளவு என்றும், வகுக்கப்பட்டு, அவ்விதி பற்றியே நிகழும். கிரேக் தேசத்திய பிதாகோராஸ் என்ற ஞானியார் சொல்லுகிறபடி, "இறைவன் கணிதசாஸ்திரி; எல்லாவற்றையும், அளவை பற்றியும் கணிதம்பற்றியும் உண்டுபண்ணுகிறார்; உண்டானவற்றை அம்முறையில் நடைபெறும்படி செய்கின்றார் (God geometrizes)."

ஆக, உலகமெல்லாம் சாங்கிய சாஸ்திரத்திற்குள் அடங்கும். எழுத்து என்றால்—உருவம். உலகத்தில் நாம் அறிகிறதெல்லாம், "நாமம் ரூபம்" என்பார் வேதாந்திகள். நாமம் என்றால், ஒவ்வொரு வஸ்துவினிடமும், அது அதன் அறிகுறியாக இயற்கையாக ஏற்பட்டுள்ள 'தொனி,' 'சப்தம்' என்பதாம். அந்தந்த வஸ்துவுக்குள்ள 'தொனி,' [அதுதன் ஹிருதயமத்தியில்] வேறு வேறாக உள்ளது. ["அநாஹதஸ்ய சப்தஸ்ய, தஸ்ய சப்தஸ்யயோத்வனி" என்பது சுருதி வாக்கியம்.] இந்தத் தொனிதான் நாதம் என்பது.

அந்தந்த வஸ்து அமையப்பெற்றுள்ள அணுக்களிற் சலனத்தின் காரியம் இந்த தொனி அல்லது நாதம். "நாமம்" என்றால்-ராமன் சுப்பன், மரம், செடி என்றவை அல்ல. இந்த உலகம் "சின்மாத்ர விஸ்தாரிதம்."—"அறிவே இவ்வுலகமாகப் பரிணமித்திருக்கிறது" என்று சொல்லப்படுகிறது.

காற்றினால் நடைபெறும் (Organ) ஆர்கன் என்றவாத்திய இயந்திரத்தில், பெரிய குழாயின் வழியாய் காற்று உட்புகுந்து, அது மேன்மேலும் பலவாறாய் சிறு சிறு குழாய்களின் வழியாய்ச் சென்று சென்று, கடைமுறையில் நுண்ணிய மயிர் போன்ற குழல்களில் பிரவேசித்து, காதுக்கு இனிமையான நாதங்களை உண்டுபண்ணுகிறதுபோல், ஈசுவரனின் சித்தத்தின் சலனமாகிய சின்மாத்திரையானது பல நாமங்களாகத் தோனிக்கின்றது. ஒவ்வோரு தோனியும் ஓர்ஓர் வஸ்துவின் கருவாம். கர்ண இந்திரியத்தினால் அறியும் போது அதை நாமம் என்றும், கண் இந்திரியத்தால் அறியும்போது, அதை உருவம்—எழுத்து என்றும், சொல்லுகிறோம். அணுக்களின் சலனமே ஒருமுகமாக அறியப்படும் போது நாதவடிவாகவும், மற்றொரு முகமாக அறியும்போது, உருவ வடிவமாகவும் அதாவது பிந்து வடிவாகவும், ஏற்படுகிறது. ஆகவே காணப்படும் பொருள் எல்லாம் நாதமும் பிந்துவுமாக இருக்கின்றது. எழுத்து அல்லது உருவம் என்பது இலக்கணையாய் நாமரூபத்தைக் குறிப்பிடுகிறது. ஆகவே, "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்றால், எண்ணின் உண்மையையும், எழுத்தின் உண்மையையும் அறிதல் எனப் பொருள் பெறும். இவ்விதம் அறிந்தால் உலகசிருஷ்டியின் உண்மையை அறிந்ததாகும் என்றபடி. சாதாரண அர்த்தம் இருக்கிறதாக வைத்துக்கொண்டால், எழுதப் படிக்கத் தெரியாத ஞானிகள் எத்துணையோ பெயர்கள் உலகத்தில் உள்ளார்கள் அவர்

* ஒருமைக்கண்=ஒரு பிறப்பில், தான் கற்ற கல்வி ஒருவனுக்கு எழு பிறப்புகளிலும் போய் உதவுதலை (ஏமாப்பு) உடையதாகும்.

களை கண்ணில்லாதகுருடர் என்று சொல்ல இயலாது. மேலும் அறிஞர்களான, ஔவையாரும் நாயனரும் சாதாரண அர்த்தத்தில் அடியில் வரும் அவ்வாக்கியங்களைச் சொல்லார்.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்."

"எண்ணென்ப, ஏனைஎழுத்தென்ப-இவ்விரண்டும்
கண்ணென்ப வாழுமுயிர்க்கு."

"கண்ணுடையர் என்பவர் கற்றோர், முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்."

இந்த உயர்வான ஞானத்தைக் கற்பிக்கின்றமையால், "எழுத்தறிவித்தவன் இறைவனாகும்"—என்றார் அதிவீரராம பாண்டியன். "ஆசாரியதேவோபவ" என்ற உபநிஷத் வாக்கியமும் இங்கு கவனிக்கத்தக்கது. 'கல்வி அறம் பொருள் இன்பம் வீடு இவை பயக்கும்.' இம்மை மறுமை இரண்டிக்கும் பரம சாதகத்தைக் கொடுப்பது; வீடு அதாவது மோக்ஷமும் அதனாற் கிடைப்பதாகும்.

"கற்கக்கழிமடமஃகும். மடமஃகில், புற்கம் தீர்ந்து இவ்வுலகிற்கோளுணரும். கோளுணர்ந்தால், தத்துவமாய்நெறிபடரும்; அந்நெறி இப்பால் உலகத்து இசை நிறீஇ, உப்பால்—உயர்ந்த உலகம் புகும்." என்பது நான்மணிக்கடிகை. கல்வியால் மெய்யுணர்வு உண்டாகும்.

"இருள் நீங்கி, இன்பம் பயக்கும்,
மருள்நீங்கி மாசறுகாட்சியவர்க்கு"—குறள்.

[மருள், மயல், மயக்கம், விபரீத ஞானம்-இவை ஒருபொருட்பெயர்.]

5. எல்லாக்குருக்களினும், காமம் வெகுளி மயக்கம் என்ற மும்மலத்தைப்போக்கும் குருவே ஞானகுருவாவர். இவரே பிறவித் துன்பத்தினின்று நீக்கும் சக்தியுள்ளவர். இத்தகைய குருவைப்பற்றி திருமூலர் அடியில் வருமாறு சொல்லுகிறார்:—

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவுகுருவின்திருவார்த்தைகேட்டல்
தெளிவு குருஉரு சிந்தித்தல்தானே"

"குருவின் உருவம் குறித்த அப்பொழுதே திரிமலம் தீர்ந்து சிவன் அவன் ஆமே." இக்குருவே ஈசனாகும். அக்குருவை சீஷன் அவ்விதமாக சிந்திக்கத்தக்கது. அந்தஞானகுரு எவ்வர்ணத்தினராக இருப்பினும், நாய்மாமிசம் தின்னும் புலையரேனும், அவரே குருவாவர், என ஸ்ரீமத் சங்கராசாரியார் 'மனீஷாபஞ்சகம்' என்ற புஸ்தகத்தில் உபதேசித்திருக்கின்றார்.

"விஷாதப்யம்ருதம் க்ராஹ்யம் அமேத்யாத
[பிகாஞ்சநம்
நீசதப் யுத்தமாம் வித்யாம் ஸ்திரீரத்நம்துஷ்
[குலாதபி."

என்பது மனுவின் வசனம்.

(இ-ள்) விஷத்தில் அமிருதம், அசுத்தத்தில் தங்கம், நீசரிடம் மோக்ஷவித்தை, துஷ்குலத்தில் ஸ்திரீரத்னம் அங்கீகரிக்கத்தக்கவை.

அடியில் வரும் நாலடியார் செய்யுளும் கவனிக்கத்தக்கது.

"தோணி இயக்குவான் தொல்லை வருணத்துக்
காணில், கடைப்பட்டான் என்று இகழார்—
[காணாய்
அவன் துணையாய் ஆறுபோயற்றே; நூல்கற்ற
மகன் துணையாய் நல்ல கொளல்.

ஸ்ரீமத் இராமாநுஜாசாரியார்க்கு ஐந்து ஆசாரியர்கள் இருந்தனரென்பதும் அவர்களில், நான்காம் வருணத்தரான, திருகச்சி நம்பிகள் ஒருவர் என்பதும், இக்குருவிஷயமாக, பிராமணரான இராமாநுஜர் ஒழுகின மாதிரிகளும் வைஷ்ணவ குருபரம்பரைகளில் செவ்வையாக அறியத்தக்கவை.

சைவ சமயத்தில், திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளும், சுந்தர மூர்த்தி சுவாமிகளும், பிராமணர்களாக இருப்பினும், கீழான வர்ணத்தில் இருந்த சில நாயன்மார்களை நம

ஸ்கரித்து, அவர்கள்மேல் அன்பு செய்திருக்கிறார்கள் எனத் தெரியவருகிறது. ஞான பூமியில் ஜாதியின் உயர்வு தாழ்வு என்ற முறை இன்றாம். அது விவகார விஷயமான உலகமுறை பற்றியது.

"குருவே சிவம் எனக்கூறினன் நந்தி
குருவே சிவம் என்பது குறித்தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்.
குருவே உரை உணர்வு அற்றதோர்
[கோவே."—திருமந்திரம்.

இத்தகைய குரு எல்லாருக்கும் தோன்றவிலர். உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தம் செய்து, தான் என்ற அகந்தையும், எனது என்ற மமதையும் அற்று, மனச்சுத்தம் பெற்று பக்குவனாக இருக்கின்ற சீஷனுக்குத் தோன்றுவர்.

"காலின் ஊதும், கரும்பினிற் கட்டியும்
பாலினுள் நெய்யும், பழத்துள் இரதமும்,
பூவினுள் நாற்றமும் போன்றுளன்
[எம்மிறை,
காவலன், எங்கும் கலந்து நின்றானே."
—திருமந்திரம்.

இந்த ஈசனே, "அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால் உப்பெனப்பேர்பெற்று உருச்செய்யுமாறுபோல," குருவாகத்தோன்றுவார். அவரைக் கடவுளென அன்பு பாராட்டப்பாலது. ஸ்வேதாஸ்வதர உபநிஷத்தில், அடியில்வரும் மந்திரம் இங்கு கவனிக்கத்தக்கது.

"யஸ்யதேவேபராபக்தி:
யதா தேவேததாகுரௌ,
தஸ்யை தேகதிதாஹ்யர்தா:
ப்ரகாசந்தேமஹாத்மந"

(இ-ள்.) "ஈசுவரனிடம் எத்தன்மையானபக்தி பாராட்டுகிறோமோ, அத்தன்மையானபக்தி குருவினிடம் பாராட்டினால், அப்படி பாராட்டுகிற சீஷன் பிரகாசிப்பான்." அக்குருவை வெளியிற்போய்த் தேடவேண்டுவதில்லை. அவரைத் தன்னுள்ளத்திற் காணலாகும் பொருட்டே ஔவையாரும்,

"உடம்பினைப் பெற்றபயன் ஆவதெல்லாம்
உடம்பினில் உத்தமனைக்காண்."—என்றார்.

அடியில்வரும் சுலோகமும் இங்கு பயன்படும்.

"சித்ரம் வடதரோர் மூலேவ்ருத்தா
சிஷ்யாகுருயுவா |
"குரோஸ்துமௌநம் வ்யாக்கியாநம்
சிஷ்யாஸ்து சிந்நஸம்சயா: ||"

(இ-ள்.) வடவிருக்ஷத்தின் அடியில் விருத்தர்களான சிஷ்யர்கள் பாலரானகுரு இருக்கிறார்கள். குருமௌனத்தால் உபதேசம் உண்டானது. சிஷ்யர்கள் சந்தேகம் நிவர்த்தியானது. இது ஆச்சரியம். இந்த சுலோகமானது இந்திரிய நிக்கிரகம், மனோநிக்கிரகம் இவைகளின் பயனாக சந்தேகம் தெளிந்து, ஞானகுரு தனக்குத்தானே தோன்றுவர்என்பதை சூசிப்பிக்கின்றது.

6. ஞானமார்க்கத்தில் குருவானவர் இன்ன சரீரத்தைத்தான் எடுத்துத் தோன்றுவர் என்று சொல்லமுடியாது. சீஷனின் பக்குவ நிலைக்குத்தக்கபடி தூணிலும் தோன்றுவர், துரும்பிலும் தோன்றுவர். ஸ்ரீமத் பாகவதத்தில் உத்தவருக்கு கீழான கிருமிகள் என்ன, வேசி என்ன, இவைபோன்றவர்கள் குருவாக அமைந்தார்கள் என்பதும்; மகாபாரதத்தில், மாமிசம் விற்கும் தர்மவியாதர், வைசியரான துலாதரர், பிராமணர்களுக்குக்குருவாக உபதேசம் செய்தார்கள் என்பதும்; க்ஷத்திரியர்கள் பிராமணர்களுக்குச் சில உபாசனைகளை உபதேசித்தார்களென்று சாந்தோக்கிய முதலிய உபநிஷத்களிற் சொல்வதும், ஆச்சரியமன்று. உலகத்தின்கண்ணுள்ள ஒவ்வொரு வஸ்துவும், ஒரு குணம் ஒரு உயர்நிலை அமையப்பெற்றிருக்கின்றது. அக்குணம்அவ்வுயர்நிலத்தை நம்மனதிற் கிரகித்து இடைவி

டாமற் சிந்திப்போமாகில் அக்குணம் அவ்வு யர்நலம் நம்முடையதாகும். இக்கருத்தைக் கொண்டுதான் உத்தவர் தமக்கு 24 குருக்கள் இருந்தனர் என்றார்.

7. ஏகவல்லியன் என்றவேடனின் உபாக்கியானம் குருசிஷ சம்பந்தத்தின் உண்மையை நன்கு விளக்குகின்றது. இந்தவேடன் துரோணசாரியாரிடம் அஸ்திர வித்தைகற்க விரும்பினன். அவர் கற்பிக்க மறுத்து விட்டார். பின்பு அவ்வேடன் அவ்வாசாரியாரிடம் அன்புள்ளவனை அவர்போல் ஒரு உருவம் செய்வித்துக்கொண்டு அவ்வுருவாரத்தின் முன் காலையிலும் மாலையிலும் இடைவிடாமலும் தீவிரபக்தியுடனே வில்லைப்பிடித்துப் பழகிக் கொண்டுவரவே மேன்மேலும் அவ்வித்தையின் பயிர்ச்சியையும்தேர்ச்சியையும் அடைந்தான். பின்பு ஒருகாலத்தில் துரோணருக்கு இவன் சாமர்த்தியம் தெரிய வந்தது. அவரே வியக்கத்தக்கபடி, அர்புதமான தான் கற்றவித்தையை அவ்வேடன் காட்டவே, அவர் 'நீ எப்படி அறிந்துகொண்டாய்'? எனவினவ, தாங்களே எனக்குக் குருவாக வந்து உபதேசம் செய்து வந்தீர்கள் என்றான். இக்கதையில் அக்குருவானவர் நேரிற் கற்றுக்கொடுக்கவில்லை. கற்றுக்கொடுக்கவும் நிராகரித்துப் போட்டார். அவ்வேடன் எவ்வாறு தெரிந்துகொண்டானெனில், குருவின் பக்திவிசேஷத்தால் இறைவனே தான்சிந்தித்த குரு வடிவங்கொண்டு இவன் உள்ளத்தில் தோன்றி அவனுக்கு இஷ்டமான கல்விப்பயிற்சியைச் செய்வித்தார். கீதையில் பகவான் சொல்லியிருக்கிறபடி,—

"யெதா மாம்ப்ரபத்யந்தெ
தாம் ஸ்ததைவபஜாம்யஹம்"

"எவ்வெவர் எப்படி நினைத்தார் அவ்வவர்க்கு அப்பொருளாய்" ஈசன் தோன்றுவர்.

8. மேலும் ஒவ்வொரு சரீரமாகிற விருக்ஷத்தில் ஒரேமாதிரியான இரண்டு பக்ஷிகள் இருக்கின்றன. அவைகளில் ஒன்று சாக்ஷியாம். மற்றொன்று போக்தாவாம். ஆசையற்று, சோகமற்று, பிறவியெல்லாம் துன்பமென நினைந்து தன்னை மறந்து, சாக்ஷியான பக்ஷியாகிய ஈசுவரனை மற்றொரு போக்தாவான பக்ஷியான ஜீவன் எப்போது நோக்கித் திரும்புகின்றானோ, அப்போது அச்சாக்ஷியோடு சேருகிறான். போக்தாவான பக்ஷி சாக்ஷியான பக்ஷியில் மறைவதாகும் என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன.

முண்டகோபநிஷத்தில்வரும் இந்த சுலோகங்களின் பொருள்:—

சரீரமாகிற விருக்ஷத்தில் ஒரே தன்மையான இடைவிடாத இரட்டை பக்ஷிகள் (ஜீவாத்மா, பரமாத்மா) இருக்கிறார்கள்; அவர்களில், ஒருவன் (ஜீவன்) பழத்தை ருசியாக உண்கிறான். மற்றவன் (பரமாத்மா) உண்ணாமல்(சாக்ஷிமாத்திரமாக இருந்துகொண்டு) பிரகாசிக்கிறான். மேற்கண்ட சரீரமான விருக்ஷத்தில், ஜீவன் மோசமடைந்தவனாய் துக்கிக்கிறான். (அகந்தை மமதை அற்று, ஞானவழிச்சென்று) மற்றவனை—ஈசுவரனையும் அவர் மஹிமையையும், இதுவென்று எப்போது அறிகிறானோ அப்போது, துக்கம் போகிறது. உள்ளபடி ஈசுவரனைப் பார்க்கிறான்.

9. குருபக்தியால் எல்லா நன்மையும்பெறலாம் என்பதற்கு அனேக திருஷ்டாந்தங்கள் உண்டு. மஹாபாரதம் ஆதிபருவத்தில் அயோததௌமியரின் சிஷர்களான உபமந்நியு, ஆருணி, வேதர் இவர்கள் குருவின் அநுக்கிரக வாக்கினால், வேதசாஸ்திரப் பயிற்சியும் ஞானமும் பெற்றார்கள் என்றும், உதங்கர் என்பவர் குருவின் சிஷ்ருஷையால் அற்புதமான சித்திகள் பெற்று மஹிமை அடைந்தாரென்றும், சாந்தோக்கிய உபநிஷத்தில், அக்கினி முதலான தேவர்களே குருபக்தியால்

சிறந்த சிஷனுக்கு வித்தைகள் உபதேசித்தார்கள் என்றும், அறிகிறோம்.

10. உலகத்தின்கண்ணுள்ள ஒவ்வொரு மதத்திலும், மதசம்பிரதாயத்திலும், குரு பாரம்பரை உண்டு. அந்தந்தச் சமயத்தில், பூரணம்பெற்ற ஞானிகள், ரிஷிகள், இவர்கள்மேல் உண்மையான பக்தியைப் பாராட்டினால், அந்தந்த ஞானிகள் நேரிலும் காட்சியிலும் தோன்றி அநுக்கிரகம் செய்வார்கள்.

இக்காரணம்பற்றி, ஒவ்வொரு ஆரியனும் தான் சந்தியாவந்தனம் செய்தமேல் "அபிவாதையே" சொல்லுங்காலத்தில், ஓர் ஓர் ரிஷியின் நாமத்தைச் சொல்லக்கடவன் என்ற விதி இருந்துவந்தது.

உண்மையாக அந்த ரிஷியைச் சிந்தித்து அன்பு செய்வானாகில், அதாவது, அவர் மாதிரி ஒழுக்கமடைந்து அவர்போல நடை பெறுவானாகில், அந்த உபாஸகன் அவர் மூலமாக ஞானம் பெறுவான். எல்லாத் தெய்வ சம்பத்துக்களையும் அடைவான்.

எல்லாரும்எழுரிஷிகளின் வம்சத்தில்உண்டானவர்கள். எழுரிஷிகளே இந்தபிரஹ்மாண்டத்தின் ஈசுவரரான ஞானசூரியனின் ரஸ்மிகளில் ஏழுவகுப்பாம் ஆகவே, அவன் அவன் அந்த அந்த பிரவரத்தை உள்ளபடி நினைந்து அந்த அந்த ரிஷிகளின் மஹிமையை அன்புடன் சிந்திப்பானாகில், அந்தந்த ஞானரஸ்மியின் (ஒளியின்) வழியாகச்சென்று கடைமுறையில், இப்பிரஹ்மாண்டத்தின் அதிபதியாகியபரமபுருஷனான ஈசுவரனை அடைவான். இதுவே "அபிவாதயே" என்றதின்உண்மை. உபநிஷத்துக்களில் அர்ச்சிராதி மார்க்கத்தைப்பற்றி சொல்லியிருக்கும் இடத்தில், அமாநவ புருஷன் ஒருவர் வந்து உபாஸகனை பிரஹ்மலோகத்திற்கு வழிநடத்தல் என்ற விஷயம் இங்கு கவனிக்கத்தக்கது.

11. "ஸமித்பாணி: சுரோத்திரியம் பிரஹ்மநிஷ்டம்" என்றதின்பொருள், என்னவென்றால், பிரஹ்மவித்தை கற்கப்பிரியமுள்ளவன் குருவினிடம் சமித்தை எடுத்துக்கொண்டுபோகவேண்டும். இதில் ஒரு தத்வத்தை உருவகமாகச் சொல்லியிருக்கிறது. காய்ந்த சமித்தானது எப்படி ஒருபற்றும் இல்லாமல் அசுவத விருக்ஷத்தினின்று தானே கீழே விழுந்து பற்றற்றுக்கிடக்குமோ, அம்மாதிரியாக அசுவத விருக்ஷமாகிற சம்சார விருக்ஷத்தினின்று விலகி, தனித்து பிராரப்த கர்மத்தால் ஏற்பட்ட சரீரமாத்திரம் தகனம் செய்ய ஆயத்தமாக சிஷன் இருக்கின்றான் என்பதை சூசிப்பிக்கும்பொருட்டு, சமித்தைக்கையில் எடுத்துக்கொண்டு போகிறான் என்று சொல்லியிருக்கிறது. அத்தன்மையான மனப்பக்குவம் இருந்தால் அல்லாமல் உயர்ந்த பிரஹ்மவித்தையைக் கற்க சிஷன் அருகன் அல்லன் என்பதைக் காட்டுவதற்காகவே, பிரச்நோபநிஷத்தில் மஹரிஷி பிப்பிலாதரிடம் பிரஹ்மபரர்களாயும் பிரஹ்மநிஷ்டர்களாயும் உள்ள 6 ரிஷிகள் ஞான உபதேசம் பெறப்போனபோது, அவர்கள் அபக்குவிகள் என்றும், ஒரு வருஷம் தபசினாலும், சிரத்தையாலும், பிரஹ்மசரியத்தினாலும் நற்காலம் கழித்து, நல்ல சம்ஸ்காரம் பெற்றமேல், உபதேசம்பெற வரலாமென்று குருவின் ஆஞ்ஞை பிறந்தது. இக்காரணம்பற்றியே இந்திரன் 101 வருஷம் காத்திருந்து அதன் மேல் அக்ஷிணிபுருஷ வித்தையாகிய பிரஹ்ம உபதேசம் பெற்றான் என்று சாந்தோக்கிய உபநிஷத் சொல்லுகின்றது. இக்கதைகள் இரண்டினால் ஞான உபதேசம் லெகுவான விஷயமன்று என்பதும், அது சரியான சம்ஸ்காரமில்லாத அதிகாரிக்குச் சொல்லக்கூடாது என்பதும் தெரியவருகிறது.

12. உலகத்தில் இரண்டு விருக்ஷங்களாக இரண்டு மார்க்கங்கள் உருவகப்படுத்தப் பெற்று இருக்கின்றன. பிரவிருத்தி மார்க்கமாகிய அசுவதவிருக்ஷம்: அதன் மூலத்தில் புருஷோத்தமனாகிய ஸ்ரீமந்நாராயணன்

இருக்கின்றார். நிவிர்த்திமார்க்கமாகிய வடவிருக்ஷம்: அதன் மூலத்தில் என்றும் பாலியரான மஹாகுருவாகிய தக்ஷிணாமூர்த்தி இருக்கின்றார். உலகத்தில் யார் யார் எம்மட்டிலும் ஞானம் உபதேசம் செய்தாலும் அம்மட்டிலும் அவர் அந்த மஹாகுருவினிட அம்சமாக விருக்கின்றார். அவர் மாவரேனும், கிழாயினோரேனும், புலையரேனும், அவர்களுக்குக் கீழான கிருமிகளேனும், அவைகளுக்குக் கீழான அசேதன வஸ்துவேனும், எல்லாரும் எல்லாம் நமக்குக் குருவாவர் எனப்பாவித்து உண்மையை அறிய அகந்தை மமதை அற்ற புத்தியை ஈசன் நமக்கு அருள்புரிவாராக. ஓம்தத்ஸத்.

["ஸ்ரீகுரு: ஸர்வகாரண பூதாசக்தி:"]

ஆத்மநாதன்.

---

EXTRACT.

பிரசேஷந்கிரட்டு.

---

## பிழைக்கும் வழி.

"பிழைக்கும்வழி" உழைக்கப்பழகுவதே. உழைப்பாவது மனதும் தேகமும் வேலைசெய்வதாகும். மனதின் வேலை நினைத்தல்; மனம் நினைத்த காரியங்களைக் கைகால்கள் செய்து நிறைவேற்றும். ஆதலால் சரியான உழைப்புக்கு முக்கியமான காரணம் சரியான நினைவு. நமக்கும் மற்றவர்களுக்கும் உபயோகமானது எது? எது செய்தால் பயன்படும்? எந்தக்காரியத்தினால் நமக்கு லாபம் அதிகமாய் கிடைக்கும் என்று யோசித்துத் தீர்மானிப்பதே சரியான நினைவு. "தெய்வத்தானாகாதெனினும் முயற்சிதன் மெய்வருத்தக் கூலிதரும்."

---

"பிழைக்கும் வழியை"த் தேடுகிறவன் பிறருக்கு நன்மை செய்வதையே கருதவேண்டும். பிறருக்கு நன்மை பயக்கத்தக்க காரியங்களைச் செய்வதினாலும் பொருள்களை உண்டாக்குவதனாலும் அவர்கள் அவைகளை ஏற்று அவைகளுக்கு ஈடாகப்பொருள் கொடுப்பார்கள். பொருள் என்பது பணமாகவாவது பண்டமாகவாவது இருக்கும். அந்தப் பொருளைக்கொண்டு ஒருவன் பிழைக்கலாம்.

"பிழைக்கும்வழி" இல்லாதவர்கள் பித்தர், 
னர், அசக்தர் ஆகிய இவர்களே. சிறுகுழந்தை
முதிர்ந்த கிழவர்களும் தீர்க்கரோகங்களினால்
னப்பட்டவர்களும் அசக்தர்கள்எனத் தக்கவர்.
வர்களெல்லாரும் பிழைக்கும்வழிதேடி உழை
ண்டியவர்களே.

---

வேலைசெய்தால் கூலிகிடைக்குமென்று தே
ந்தவன் ஒருவன், பெரிய மிராசுதார் ஒருவரு
வீட்டுக்கொல்லையில் கிடந்த மரக்கட்டைகளை
ட்ட ஆரம்பித்தான். தான் வேலைசெய்துகொ
ருப்பதைப் பார்த்து மிராசுதார் தனக்குக் கூலி
ப்பார் என்று அவன் நினைத்திருந்தான். பகல்
னைந்து நாழிகைக்கு மிராசுதார் வீட்டுக்கு வந்
ர்ந்தார். கொல்லையில் கட்டைவெட்டிக்கொண்
ப்பவர்களைக் கண்டு என்ன செய்தாரென்று நி
தீர்கள்? தன்வேலைக்கு மெச்சித் தனக்குக் கூலி
டுப்பாரென்று அவன் நினைத்தான். தம் ம
டைகளை எவனோ வெட்டிக்கொண்டுபோக எ
ப்படுகிறானென்று மிராசுதார் நினைத்தார். ஆ
அவனை அடித்துத் துரத்தினார். அவன் வேலை
ய்தும் கூலிகிடைக்காமற்போன காரணம் எ
யென்று யோஜித்துத் தெரிந்துகொள்ளுங்கள்
மதிந்து முறைப்படி செய்யும் வேலையே கூலி

---

பிழைக்கும்வழியை நாமாகத்தேடுவானேன்?
வைத்தவன் தண்ணீர் வார்க்கமாட்டானா? மர
போல் நாமும் கைகால்களின்றிப் பகுத்தறிவ
இருந்தால் நமக்கும் தண்ணீர்வார்த்து வளர்க்க
ண்டியது நிச்சியமே. மரத்திற்கு உரிய தர்மமே
உழைப்புக்குத் தகுந்த கூலி என்பதே மனித
ஏற்பட்ட தர்மமாகும். மற்றும் விரித்துச் 
வின், புருஷப்பிரயத்னம் ஒன்பது பங்கும் 
கடாக்ஷம் ஒரு பங்கும் கூடிப் பிரபஞ்சத்தில் 
ஹாரம் நடக்கவேண்டியது தர்மம். அதிலும் 
வகடாக்ஷம் தனக்குத் தானாகப் பிரயத்தியக்ஷமாக
நம்முடைய தவத்துக்கும் பக்திக்கும் மெச்சிப்
சிவன் பிரத்தியக்ஷமானார், அல்லது மகாவி
பிரத்தியக்ஷமானார், நமக்கு வேண்டிய வரமளி
தார் என்பது இந்த யுகத்தில் நடவாதகாரியம்.
முடைய உழைப்புக்கு மெச்சி, நம்முடைய வி
யற்சிக்கு வியந்து கருணைமிகுந்து "தெய்வம்மா
னுபேண" நமக்கு கூலிகொடுப்பதே கலிகால
தர்மமாகும். உழைக்க இஷ்டமில்லாவிட்டால்
கையும் காயும் [illegible]றவளர்த்து ஜீவிப்பதுபோல
மும் ஜீவிக்கவேண்டும். இக்காலத்தில் "
(கொடையாளி, ஈகையில்சிறந்தவன்) எவனென
வண்ணான் ஒருவனே எனத்தகும். ஏனெனில்,
கொடுத்த பொருளை அவன் திருப்பி நமக்குக்
த்துவிடுகிறான். இப்போது அதுவே பெரிய 
யிருக்கிறதென்பதை மறக்கலாகாது.—ஆரோ
போதினி.